நகற் மகாதெவற் சொமல தெவற்திகளமிககம ஸ்ரீ மகெதவறக கணருன ஜெபவாங்திரிக தெவற்கள் வெண்டும் நிவந்தகங்கள் கருப்பகாக ருப்பூற் பிடாகை பூபாலகனகருலவாரிலெ ஜெமதித்து வெலி நிலம் மூன்ருவது முதல் ஒவதான அரியலியாக ரிட்டு முன்புடையாம் பபம்பொம் வூம்மதெசமாயி வறுதிதபமயுமமுந்து தைாட்டினபடியும தலிங கத்துங்கசொழநல்லூர் எனும் பெராயி வலப் பிரித்து வரியிலாரும் வரிக்குமவசெயிவார்களும் எழித் திட்டஊவரி தாக சொன்ஞெம். யிப்படி முந்தாவது முதல் கைக் கொண்டு தெவற்க்கு வெண்டு திவந்தஞ் செயக்கப்பண்ணு கங்கை கொண்டசொமகளப்பளராயன் எழுத்து. வில்லவருயன் ஞழுககு. மடயொண்டு மூன்ருவது ஞள் தொண்ணூத்தெ யிவை ஸூஹா ஒஞ் செய்தருளின திருமுகப்படி விருதராசபுயங்க வளஞட்டு மெர்காஞட்டு ஸூமஷெமுழ ஜயங்கொண்டசொழ சருபெதமங்க லத்து உடையா திருத்தினை நகருடைய மகாதெவற் வெண்டும் தெவான்காங்களாக்கி இவ்வூர் பெடாகை பூவாலசுந்தற நல்லூரில் யிடுகத்தில் துசகானறத கணக்கன் கர்ப்பக பிரியனெழுத்திட்ட கணக்குப்படி பஞ்சவன் மாதெவி வதிக்கி கிழக்கு வீறஞராயணன் வாய்க்காலுக்கு வடக்கு காயலுருதிக்கி தெற்க்கு திரிபுவன மாதெவி வதிக்கி கிழக்கு யிவ்வாயிக்காலுக்கு வடக்கு நார தெவற்கு முதகண்ஞரும் ரெண்டாங் கண்ஞருக்கு தெற்க்குக் குடையவும்வராகமயிரையிலிருக்கு கழனிபுடையாரும் பழம்பெரு வும்மதெஜெமாயி ருவாதிறப்படி யழகிமிதை ஒட்டிநபடியும் தவர்த்து யாண்டு முன்தவது முதல் ஒவககம்மின்ஞரிந்த குலொத் துங்க சொமநல்லூரில் ஜம்பகத்து வெலியிஞல் நிலபொதி [நெல்][1] வார்த்துவராகனும தாரெபாதி [நெல்][1] கந்த புஞ்சை சகலவரி யிரைகஊ மகாயிஞ சாயி மயிப்படிதர யாண்டு மூன்ருவது முதல் வெலி ஒன்பதுக்கு[நெல்][1]யிறுவத்திஞர்க் கலமாக யிரைகட்டின நெல்லும் ஆயிரகலத்துக்கு நெர் ஆயிரகலத்துக்கு புறவரிசிகரத்து முகவெட்டிதசொவு கிழவஞழுத்து. முதவெட்டி தெங்கருடை யான் கை எழுத்து. முகவிடம தலைஞற் கை எழுத்து. முகவெட்டி வாட்க உடையான் கைஎழுத்து. புரவரி சிகரணஞயகம் யிறுங்கர் உடையான் கை எழுத்து. (ச)வுரி சிருமண்ணுடையான் கை எழுத்து. புறவரி சிகளான பொன்னுமான் கை எழுத்து. வரிக் கரணஞதம வாணிநஞழுதது. வயஞட்டரை கை எழுத்து. சித்தருயஞர் கை எழுத்து. வயனதருயன் கை எழுத்து. களப்ப ருயன் கை எழுத்து.

---

1. நெல் என்பது உ போன்ற ஒரு குறியீட்டால் குறிக்கப்பட்டுள்ளது.

பெரியாகுப்பம் Periyākuppam

மக்கென்ஸி காலத்தில் இவ்வூர் திருவாதி தக்கடியில் சேர்ந்திருந்தது.

சாசனம் — 6] [D. 3642

கோவிலுக்கு எதிரே குளத்துக்கு உள்வாயில் கல்லில் பொறிக்கப்பட்ட கல்வெட்டு.

On a stone set up on the tank-bund opposite to the Tiru-Anantēśvara temple. This inscription dated in Viḷambi, Āḍi, 10 registers the tax-free gift of the lands included in maḍavaḷagam of the village Kallaḍavi to the god Tiruvanantiśvaram-uḍaiya-tambiranar by Śaṭṭaipperumaḷ, the agent of **Muthukrishnappa Nayakar Ayyan.** This Muthukrishnappa is evidently the son of Vaiyappa-Krishṇappa-Koṇḍama Nāyaka mentioned in a Chidambaram record in the same month (No. 325 of 1913). Presumably the Śaka year of Vilambi is 1520 and the corresponding English date of this inscription would be A.D. 1598, July 9th, Sunday. There is also an inscription of this chief of the previous year Hēviḷambi at Panaiyavaram in the Villupuram Taluk. (No. 329 of 1917).

விளம்பிஞூ ஆடிமீ ௰உ ஸ்ரீமது முத்துகிஷ்ணப்ப ஞய்க் கறய்யன் காரியத்துக்கு கற்தாரன சட்டைப் பெறுமாள் பிள்ளை அவர்களும் வமிசுகளப்பாத்துடையாறும் கல்ல[டா]வி ஊற வறும் திருவனந்திசுறமுடைய தம்பிரானுற்க்கு உள்கிடை மட வளாகத்தில் செ[ர்*]ந்த நில மாமுலாயி புளியில் வத்தடிக் குப்பம் உள்பட சறு[வமானிய]மாயி கட்டளையிட்டொம். யிந்த தற்ம்மம் சந்திராதி[த்தர்வரையம்] நடத்திவற கடவராகவும் யிந்த தற்ம்மத்துக்கு யாதாமொறுத்தற் அகிதம் பண்ணுல் கெங்கைக்கரையில் காராம்பசுவையும் தன் மாதா பிதாவையும் கொன்ற தோஷத்திலே பொக கடவராகவும். யிந்த தற்ம்மம் ஆபத்தாறணப் பெறுமாள் பிள்ளை அவர்கள் கட்டளையிட்டு யிந்த சிகறம் றண்டு சுத்தமதிலும் கட்டி வய்த்த புண்ணியம். வழிநடை யெறுத்துக்கு ஒறு காசும் தாமணிக்காசும் திருப் பணிக்கு பலறுக்கும் புண்ணியமாகக் கட்டளையிட்டொம் [॥*]

சாசனம் — 7] [D. 3643

பிராகாரத்துக்குள்ளே தென்பக்கம் சன்னிதிக்குத் தெற்கில் பிள்ளையார் கோவிலுக்கு வடகிழக்கு மண்டபத்தில் வெளிப்புறமாக எழுதியுள்ளது.

On the south wall of the maṇḍapa in front of the central shrine in the same temple. Dated in the 11th year of the Pāṇḍya king Jaṭāvarman *alias* Tribhuvana Chakravartin **Sundara**

**Pandyadeva,** the inscription records the tax-free gift of 16 *mā* of land in Pērūr *alias* Kallaḍavi to god Uḍaiyar Tiruvanantīśvaram-uḍaiya nayanār at Kallaḍavi in Vaḍagarai Virudarājabhayaṅkara vaḷanāḍu.

சொஸ்த்திஸ்ரீ [॥*] ஸ்ரீ கொச்சட(ம்)பன்மர் திருபுவன சக்கிரவற்த்திகள் சுந்தற பாண்டிய தேவர்களாண்டு-மக வது. அருளிச்செய்ய.[1] வடகரை வறுதராச புயங்கர வளநாட்டு பெறுரான கல்லடாவியில் உடையார் திருவனந்தீசுறமுடைய(ர) நயனார் கோவில் தானத்தாறுக்கு: யின்நயனார் கோயிலுக்கு மெற்க்கு பழந் தெவஸ்தானம் நிலம்[2] இர[ண்டு]மாவும், இவ்வக வட[க்*]கு பெறுவழிக்கு தெற்குப்பட்ட தாளெ தொண்டியில் நிலம்[2] பதிநாலு மா, ஆக நிலம்[2] [பதின்]ஆறு மாவுக்குள் நிக்கு[ம்*] மா பிலா நெல்லி புளி உள்பட பூசை[க்*]கும் திருப்பணிக்கும் உடலாக யிந்த நிலத்தாலும் மறத்தாலும் வறுங் கடமை காசு கடமை ஆயவற்க்கம் உடதிகூறமுலக்கை மாவடை உள்ளிட்ட யெப்பெறப்பட்ட ஆயிற்தாயமும் யிரையிலியாகத் தந்தோம். இப்படிக்கி இவ்வொலைப் பாடாகக் கொண்டு செல்வதாகக் கல்லிலும் சூலமுத்திபணம்.[3] பண்ணிகொண்டு சந்திராதித்தவ றுள்ளவரை செம்பிலும் வெட்டிக் கொள்ளக் கடவிராகவும் [।*]

## சிதம்பரம் தாலூகா

## CHIDAMBARAM TALUK

### காட்டு மன்னார் கோயில் — Kāṭṭumannār Kōyil

இவ்வூரை மன்னார்குடி என்றும் காட்டு மன்னார்குடி என்றும் வழங்குவர். தஞ்சாவூர் ஜில்லாவில் உள்ள மற்றொரு மன்னார்குடியினின்றும் இதை வேறுபடுத்திக் காட்டுவதற்காகத் தஞ்சாவூர் ஜில்லாவில் உள்ளதை ராஜ மன்னார்குடி யென்றும் இதைக் காட்டுமன்னார்குடி யென்றும் குறிப்பர்.

கல்வெட்டுகளிலே இவ்வூருக்கு வீரநாராயணச் சதுர்வேதி மங்கலம் என்ற பெயர் காணப்படுகிறது. வீரநாராயணன் என்பது சோழ மன்னனான முதற் பராந்தகனுடைய பெயர். அவன் காலத்தில் எற்பட்டதுபோலும் இவ்வூர்.

---

1. 'அருளிச்செயல்' என வாசிக்க.
2. 'நிலம்' என்பது ரு போன்ற எழுத்தால் குறிக்கப்பட்டுள்ளது.
3. 'சூலஸ்தாபனம்' என்று வாசிக்க.

வைஷ்ணவர்களுக்கு இவ்வூர் முக்கியமான ஸ்தலம். நாதமுனிகள், ஆளவந்தார் ஆகிய இரண்டு பெரியார்களும் அவதரித்த இடம்.

சாசனம் — 8] [R. 3113

வீர நாராயணஸ்வாமி கோவிலின் பெரிய கோபுர வாசலில் உள்ளது.

On a stone at the gateway of the Vīra Nārāyaṇasvāmin temple. Records that the brother of a certain Appā-piḷḷai granted in Kali 4442, Āṅgirasa, Aṟppas'i, 20, during the reign of the Vijayanagara king **Krishna [deva] raya,** 52 *ma* of land for offerings to god Aḻagiya-Maṉṉār at Sundara Pāṇḍiya chaturvēdimaṅgalam *alias* Vīranārāyaṇanallūr in Virudarāja bhayaṅkara vaḷanāḍu.

The Kali year 4442 world correspond to A. D. 1341 with the cyclic year Vṛisha, and not Āṅgirasa as stated in the inscription and the period is two centuries earlier for the Vijayanagara king Kṛishṇadēvāraya. The date is evidently wrong.

ஸ்வஸ்தி [||*] ஸ்ரீமன் மகா மண்டலெசுவர கிருஷ்ணருயர் பிறிதிவி ராச்சியம் பண்ணி அருளாநின்ற கலியுகப்தம் சதுசாசமஉ மெல் செல்லா னென்ற [1] ஆங்கிர[ஸ*] வருஷம் அற்பிசி மீ உம்உ ஸ்ரீமது அப்பா பிள்ளை தம்பி வரதராச பயங்கர வள நாடு [2] ஆன கழக்கால் ந[ா*]ட்டில் வீ[ர*]ணாராயணம் தெற்கு நாடு சுந்தரபாண்டிய சதுற்வெதி மங்கலமான வீரணாராயண நல்லூர் ஸ்ரீ மல்லிராபதி னம்பெருமான் அழகிய மன்னு(ற்)ருக்கு தி(ரு) [ரி] காலசந்தி உபயமாக யெப்பொழுதும் ஒரு சந்தி அமுதுசெய்யும்படி கட்டளையிட்டு சந்திராதித்தியாள்வரையும் ஆண்டுஅனுபவிக்கும்படியாக நடக்கும்படிக்கு சிரந்த பூவேந்திர சோழநல்லூர் மணவதிக்கு மெற்கு..................ட்ட விளை நிலம் டுஉ மா. இந்த அன்பத்திரண்டு மாநிலமும் சந்திராதித்தியாள் வரையும் நடக்க[க்*] கடவதாகவும். இந்தத் தற்மத்துக்கு அகிதம் பண்ணினவர்கள் கெங்கைக் கரையிலெ காரும் பசுவைக் கொண்ண(ப்)பாவத்திலெ போகக் கடவார்களாகவும்: இபபடிக்கு செவ்வண்ணரெழுத்து. செல்லப் பிள்ளை யெழுத்து. [3]

---

1 'நின்ற' என்று வாசிக்க.

2 'விருதராச பயங்கரவள நாடு' என வாசிக்க.

3 மக்கென்ஸியின் மூலத்திலிருந்து டைலர் பிரதிசெய்து வைத்துள்ள பாடத்தைக் கொண்டே இந்த சாசனம் பதிப்பிக்கப் படுகிறது. இது டைலர் பிரதி செய்து வைத்துள்ள தொகுதிகளுள் 5-ஆம் வால்யூம் 303-ஆம் பக்கத்தில் காணப் படுகிறது.

சாசனம் — 9] [D. 3302-I/29

இந்தச் சாசனம் எந்த ஊரில் எவ்விடத்தில் பொறிக்கப்பட்டிருக்கிறதென்னும் விவரம் காணப்படவில்லை; ஆயினும் காட்டுமன்னார் கோவில் வீரநாராயண ஸ்வாமி கோயிலைச் சேர்ந்ததாதலால் இவ்விடம் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஓலையிலோ காகிதத்திலோ எழுதப்பட்டிருக்க வேண்டுமென்று தோன்றுகிறது.

A document, written probably on paper or palm leaf, dated S'aka 1679, Is'vara, Tai, 12, Saturday, [Su.*] trayōdas'i, Mrigas'irsha, corresponding to A.D. 1758, January 12, issued by the renters of the Chidambaram-Pañchamal country allowing *magama* of half a measure of paddy for every *Kalam* of paddy harvested every year in all the 180 villages of the old *Jāgir* of Viranarayana s'irmai to the temple of S'ri Viranarayanasvamin at Mannarkovil for the daily offerings to the god, the goddess Marakatavalli Nāchchiyar and S'riman Nādhamunigal.

ஸ்வஸ்திஸ்ரீ [||*] விஜயாப்யுதய ஸாலிவாஹந ஸகாப்த வறுஷம் ௲௬௱௭௰௯-மெல்செல்லா னின்ற யீசுவர வருஷம் தைமீ ௰௨உ சனிவாரமும் திரையொதசியும் மிறுகசிர னக்ஷத்திறமும் கொண்டனும யொகமும் பாலவா கறணமும் கூடின சுபதினத்தில் விறனுருயண சிமையில் மன்னாறுகுடி தாலுகா ம(ா)ன்னர் கொவிலில் எருந்தருளியிருக்கும் அகிலாண்டகொடி பிறம்மாண்டனுயகருன ஸ்ரீ விரனுராயணச் சிமைக்கு[1] சிதம்பரம் பஞ்சமால் யிஜாராதாறர் ௱. சாமராவு அவர்கள், ௱. அறும்பாதை முத்துவிசையருய விஞயக பிள்ளை அவர்கள், சின்னதுரை விடுத்தலமிசாயபு துபாசி ௱. ராயபிள்ளை அவர்கள் மூலம்[2] எழுதிக் குடுத்த தான சாசனம். ஸ்ரீ விறனுருய்ண சுவாமி, ஸ்ரீ மறகதவல்லி னுஞ்சார்[3] ஸ்ரீமன் னுதமுனிகளு[டை*]டய நிதிய நயிவெத்தியங்களுக்கு [ம்*] உத்சவம், முதலான திருப்பணிகளுக்கும் னடக்க வெண்டியத்துக்கு னுங்கள் சம்மதியாக விறனுருயணச் சீமை பழை[ய*] ஜாகீர் கிராமம் ௱அ௰ னுத்தி யெண்பதுலெயும், கண்டு முதலான உடனுக்கு உட[ன்*] வாரத்துக்கு பொதுவுலெ

1 'ஸ்ரீ வீரநாராயண ஸ்வாமிக்கு' என்று வாசிக்க.

2 இது 'மூல' என்ற கூட்டெழுத்தால் குறிக்கப் பட்டுள்ளது.

3 'ஸ்ரீ மரகதவல்லி நாச்சியார்' என்று வாசிக்க.

மகமை, நெல்[1] கலத்துக்கு படி உ அரைப்படி தானியமும் மகமை பண்ணி ருெட்டார் குடி கணக்குப் பிள்ளேகளும் சம்மதி யாக எழுதி குடுத்தொம். யிந்தப்படிக்கி சம்மதிச்சபடி யினுலெ பொதுவில் நெல்[2] கலத்துக்குக் கால்படி தா(ன்)னியமும் வருஷப்பத்திக்கி கால்(ப்)படி தானியமும், யிந்தப்படிக்கி சந்திரா தித்தர் உள்ளவரைக்கும் புத்திர பவுத்தற பாறம்பரியமாக வரு(க்)குர பெர்கள் ஆமானத்து மாமூலாயி வருகுற யிஜா(ா)ரு மாமுல் ஆமில்களும் னடப்பிச்சுக் கொண்டு வருவாராகவும். யிந்த தற்(ம்)மததுக்கு யாதா மொருவர் அனுகூலம் பண்ணுகு ருர்களொ அவர்கள் ஸ்ரீ திருமலே, ஸ்ரீ காஞ்சிபுரம், செது, சிதம் பறம், காசி, யிவடங்களிலெ னித்தியம் அன்னதானம் பண்ணின சுகுற்தத்தை அடைவார்களாகவும். யிந்த தற்ம்மத்துக்கு அகிதம் னிணேத்தவன் காசியிலெ கெங்கைக்கரைலெ காராம்பசுவை கொன்ற தொஷத்திலெ பொவாராகவும்.

𑌦𑌾𑌨𑌪𑌾𑌲𑌨𑌯𑍋𑌰𑍍𑌮𑌧𑍍𑌯𑍇 𑌦𑌾𑌨𑌾𑌚𑍍𑌛𑍍𑌰𑍇𑌯𑍋𑌽𑌨𑍁𑌪𑌾𑌲𑌨𑌂 ।

𑌦𑌾𑌨𑌾𑌤𑍍𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌮𑌵𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌪𑌾𑌲𑌨𑌾𑌦𑌚𑍍𑌯𑍁𑌤𑌂 𑌪𑌦𑌂 ॥[2]

| ஒப்பம் | இப்படி அரும்பாதை |
| --- | --- |
| யிந்தபடி தாசில் | முத்து விஜயருய விஞயக பிள்ளே |
| னல்ல தம்பி ருசுவு. யிந் | குமஸ்தா |
| தப்படி யிஜாராதாறற் | ராமலிங்கபிள்ளே சம்பிறதி ருசுவு. |

## சிதம்பரம் — Chidambaram.

கூத்தாடும் பெருமானுன நடராஜர் கோயில் கொண்டிருக்கும் இவ்வூரைத் தில்லே யென்றும் பெரும்பற்றப் புலியூர் என்றும் வழங்குவர். சைவர்கள் இவ்வூரைக் கோயில் என்று சிறப்பாகக் குறிப்பர். சோழமன்னர்களில் பலர் நடராஜப் பெருமானேத் தங்கள் குலதெய்வமாகக் கொண்டு போற்றிப் பணி செய்திருக்கிருர்கள்.

இங்கே கோயிலில் விஷ்ணுவும் பள்ளிகொண்டிருக்கிருர். கோவிந்த ராஜர் என்று வழங்கப்பெறும் அந்த மூர்த்தியும் சரித்திரப் பிரசித்தி பெற்ற வரே. வைஷ்ணவர்கள் இவ் விடத்தைத் திருச்சித்திர கூடம் என்று வழங்குவர்.

---

1. சூ போன்ற ஒரு குறியீட்டால் எழுதப்பெற்றிருக்கிறது.

2. இந்தச் சுலோகம் பொதுவாகத் தான சாசனங்கள் பலவற்றிலும் காணப்படும். இதேபோல வேறு சில குறிப்பிட்ட சுலோகங்களும் உண்டு. மக்கென்ஸி தொகுத்த சாசனங்களிலும் அவை பல இடங்களில் வருகின்றன. சில இடங்களில் கிரந்த எழுத்திலும் வேறு சில இடங்களில் தமிழ் எழுத் திலும் உள்ள அவை பெரும்பாலும் பிழைபடவே பிரதி செய்யப்பட்டுள்ளன. ஆகவே அவற்றின் சரியான உருவத்தையும் தமிழ் மொழிபெயர்ப்பையும் தனியாகப் பிற்சேர்க்கையில் சேர்த்துள்ளோம்.

சாசனம் — **10**] [D. 3325

கோவிந்தராஜசுவாமி கோவில் துவஜஸ்தம்ப மண்டபத்துக்குக் கிழக்கு.

**(No. 272 of 1913)** On the south wall of the first prākara. A record of the Vijayanagara king **Achyuta-deva Maharaya** in S'. 1461, Vishu (wrong), Mithuna, s'u. chaturdas'i, Sadhyayoga, Saturday, Anuradha, which corresponded according to L. D. Swamikannu Pillai to A. D. 1539, May 31, Saturday. The king ordered that the image of Tillai Govindaraja Perumāḷ at Perumbaṟṟappuliyūr in Vaḷudalambattu Us'āvaḍi, a sub-division of Veṇṇaiyūr nāḍu in Rajādhiraja vaḷanāḍu might be set up according to the ritual of Vaikhānasa sūtra and granted 500 *pon* which was the income from four villages for the up keep of the daily worship.

ஸுபமஸ்து [||*] ஸ்வஸ்தி [||*] ஸ்ரீமநு மஹாமண்டலெஸ்வரந, ஹரி ஹராயவிபாடந, பாஷெக்கு தப்புவராயகண்டன், மூவராய கண்டன், கண்டநாடு கொண்டு கொண்டநாடு குடாதான், பூர்வ-தக்ஷிண பஸ்சிமொத்த [ரசதுஸ்ஸமுத்தி*]ரா[தி*]பதி, ஸ்ரீவீரப்பிரதாப ராஜாதிராஜந, ராஜபரமெஸ்வரந, அச்சுத தேவ மகாறுயர் பிறுதிவி ராச்சியம் பண்ணி அறுளா நிண்ட[1] சகாப்தம் ௲௪௱௬௰க யிது மெல்(ச்)செல்லா[1] நிண்ட விகுற்றி ஸம்வத்ஸரம் மிதுன ஞயற்று பூறுவ பக்ஷத்து - சதுர்த்தசியும் ஸாத்யநாமயொகமும் மந்த வாரமும் [2]பெத்த அனுழ நட்சத்திரத்து னாள் வடகரை இராசாதி ராஜ வளனா[ட்*]டு வெண்[ணை*]யூர் நா[ட்*]டு வழுதலம் பட்டுச் சாவடி தநியூர் [ப்*]பெரும்பற்றப்புலியூரில் அச்சுததெவ மகாராயர் பெருமாள் தில்லை கொவிந்தராசரை ப்ரதிஷ்டை பண்ணிவைற்று[3] திருவாராதனக் கட்டளைக்கி[4] காவேரிக்கி வட கரை கடலங்குடி மாகா(ணையி) [ணத்தி]ல்செ(ற்ற)[ர்ந்த] கட லங்குடி சந்(த)தை வழிச்சாரிப்பட்டடை சலிகததாயி கிறுமம்-க, குலதீப கிறுமம் - க, அஞ்சரை வாயிற்றலை கிறுமம்-க, முள்ளக்குடி கிறுமம்-க. ஆக கிறுமம், ச உ ளுங்கெல்லைக்குள்பட்ட நஞ்சை புஞ்சை நத்தம் செய்(த்)தலை - திடர் வடக்கு வடக்கு

1 'நின்ற' என வாசிக்க.

2 'மந்தவாரம்' என்பது சனிக்கிழமை.

3 'வைத்து' என்று வாசிக்க.

4 'கட்டளைக்கு' என வாசிக்க.

றைகை பொன்[1] ரூா. இந்தச் சீமை கிருமம் ளுலிலுண்டான பொன் அன்னூறும் பெருமாள் தில்லை கொவிந்தராயருக்கு திரு வாராதனைக்கு நித்தியப்படி ஏறுபடி உள்பட்டபடியாலே ஸவ-ஃ மானியமாக சந்திராதித்திய வரையு மனுபவித்துக் கொள்ள[க்*] கடவதாகவும். ஸ்வாமி அச்சுத தேவ மகாருயர் உத்தாரப் படி தில்லை கொவிந்தருசரை வயிகானஸ ட்செத்திரத்தில்[2] ப்றதிஷ்டை பண்ணி திருவாருதனம் பண்ண கட்டலையிட்ட நம் பிமார் முப்பதுக்கு வட்டத்தில் பிரிவு: திருவீதியில் காசிவ கொற்றிரற்றில்[3] குப்பய்யருக்கு ளுள் எட்டு; திண்டிவநம் பாரது வாச கொற்றிரத்தில் நல்லபெருமாளுக்கு ளுள் எட்டு; திரு வெந்திபுரம் கவுசிவ கொத்திரம்[4] தெயிவனுயக பட்டர் ளுள் எட்டு; தாடாளம் கொவில் கவுதம கொத்திரம் ஸ்ரீனிவாச பட்டர்க்கு ளுள் றெண்டு; மெல்ப்படி ஊர் பாறத்துவாச கொத்திரத்தில் நரஸிம்ஹஅய்யருக்கு ளுள் ளுலு; முன்வகைப்பெர் அஞ்சுக்கு ளுள் ௩0௨. யிதுக்கு நெறுவாக [க்*] கட்டலை. நம்பியார் தாநத்தார் உள்பட நெறுவாகம ௬ ஒன்று பெராபபணடாம. உ மகமை நெறுவாகம் ஒன்று. கொவில் முதல்[த்]தான முதல் தேசாந்திர முதல். உ. ஸம்ப்ரதி மூன்று ஸ்ரீபாதம் தாங்கும் பிருமணுள் ஊழியம. கௌசிக கொத்திரதது குஞ்சப்பூர் ஸ்ரீராமய்யா சித்திர கூடம் தில்லை கொவிந்தராசரடுமை கைகொள்காணி திருமெனி காவல் திருவொள்[5] ஊதியமென பெருமாள் அடியாரைவிட(வ) [வு]ம் திருனுள்களுக்கு திருவீதியில் யெழுந்தறுளப் பண்ணவும். மற்றுந் திருக்கொவிலுக்கு வெண்டின ஊழியம் நம்பிமார்மொதல் குப்பை யெடுப்பான்கடை கடைக்கட்டளைக்கு கட்டளையிட்ட உத்தாரப்படி ஊழியமுண்டானதெல்லாம வாளவாளகள் காணி யாயிக்.கொன்று[6] அந்தந்தப்படி சந்திர சூரியாள் பரம்பரையாக ஊழியம் பண்ணி வினியொகங்கள் உணடானது பெற்றுவரக் கடவர்களாகவும். உ.

---

1 உ போன்ற ஒரு குறியீட்டால் எழுதப்பட்டுள்ளது.

2 'வைகாநஸ ஞுத்திரத்தில்' என்று வாசிக்க.

3 'கொத்திரத்தில்' என வாசிக்க.

4 'கௌசிககொத்திரம்' என்று வாசிக்க.

5 'திருஉள் ஊழியம்' என்று இருக்கவேண்டும்.

6 'கொண்டு' என வாசிக்க.

சாசனம் — **11**] [D. 3324

*கோவிந்தராஜ ஸ்வாமி கோவில் கோபுரத்துக்குத் தென்புறம்.*

(No. 271 of 1913) On the east wall of the first prākāra. A record of the Vijayanagara king *Mahāmaṇḍalēs'vara* **Srirangaraya** (III) dated in S'. 1565, Subhānu, Paṅguni 7, pañchami, Friday, Rēvati stating that the king repaired the big maṇḍapa in front of the Tillai Gōvindarājasvāmin shrine at Tiruchchitrakūṭam, the gōpura of the shrine, the vimānas of the goddess Puṇḍarīkavalli nāchchiyār and S'ūḍikkoḍutta nāchchiyār and the maṇḍapa in front of Tiruvāḻi āḻvān and also made rent-free the five villages Āḍūr, Karuṅguḻi Kuṟiyamaṅgalam, Marudāntanallūr and Uḍaiyūr, in which the S'ri Vaishṇavas were permanently living. The equivalent English date of this inscription would be A.D. 1644, February 2, Friday, as calculated by L. D. Swamikannu Pillai, when the solar month was Mās'i and not Paṅguni.

ஸ்ரீராமாநுச[ா*]யநமஹ

ஸ்வஸ்தி [||*] ஸ்ரீமந் மஹாமண்டலெஸ்வர ஸ்ரீறெங்கருயர் ப்ருதிவி ராஜ்யம் பண்ணி அருளாநிண்ட சகாப்த்தம் ௲ரு௱௬௰ரு. யிது மெல்ச் செல்லாநிண்ட ஸுபாநு ஸம்வத்ஸரம் பங்குனி மீ ௭ தெதி பஞ்சமி சுக்கிரவாரம் பெற்ற ரெவதி நக்ஷத்திற ஞள். திருச்சிற்றரகூடமதில் தில்லை கொவிந்தராச சுவாமிக்கு ஸ்ரீ றெங்கராய[ர்*]

தாநபாலநயொர்மத்யெ
தாநாச்ச்ரெயோநுபாலநம் |
தாநாத் ஸ்வர்க்கம் அவாப்நோதி
பாலநாதச்யுதம் பதம் ||

யெங்குர [1] அறுதற்றின் பெருமாள் கொவில் சீற்ணொத் தாரணம் பண்ணிந கைங்கரியம். கொவிந்தராஜ சுவாமியின் மின்[2] பெரிய திருமண்டபம், சன்னதி திருக்கொபுரம், புண்டரீக வல்லி நாச்சியார் அம்மன் தி[வ்*]விய விமானம், சூட்டி குடுற்ற ஞச்சியார் அம்மன் தி[வ்*]விய விமானம், திருவாழி (ஆழ்வி) ஆழ்வான் சன்னதி முன்மண்டபம், ஸ்ரீ வைஷ்ணவர்கள் நித்திய [வ*]ாச கிருமமான ஆடுர், கருங்கழி,[3] குறியாமங்கலம், மரு தாந்தநல்லூர், உடையூர், யிந்த அஞ்சு கிருமம் சறுவமானியம்.

---

1 'என்கிற' என வாசிக்க.

2 'முன்' என்று வாசிக்க,

3 'கருங்குழி' என்று வாசிக்க.

யிந்த கைங்கரிய மெல்லாம் ஸ்ரீறங்கரூயர் சிற்ஹெணுத்தாறணமாக பண்ணிநபடியினுலெ ஆன்று அனுபவிக்கக் கடவார்கள். உ

சாசனம் - 12] [D. 3328 (b)

ஸ்ரீ சபாநாதர் சன்னிதானம் தெற்குவாசல் கீழ்புறம் திருநிலே முகப்புக் குறட்டிலே எழுதியிருப்பது.

On the eastern side of the front platform to the southern entrance to the *sannidhi* of Sabhānāthar. A record dated in Śaka 1400, Viḷambi, Kārttigai, Paurṇimā, Friday, Pushya of **Ananda-tandavap-perumal Tondaimanar Peruman** registering the tax-free gift of the village of Dēvipaṭṭaṇa-Vallam situated as an island between the two rivers in the Rājādhirāja - vaḷanāḍu for the worship, offerings, etc. to the god Ānanda-tāṇḍavēs'va-ram-uḍaiya-Nāyanār installed by him previously in Rājākkaḷ Tambirān tirumāḷigai, to Samasta lokēs'varam-uḍaiya Nāyanār installed [by him] in Vikrama S'ōḻan tirumāḷigai and to Sadānanda tāṇḍavēśvara Nāyanār, on the occasion of a certain *abhishēka* the particulars of which are not clear.

The date is irregular as Kārttigai Paurṇami will not combine with the *nakshatra* Pushya. But the cyclic year is correct.

The inscription, though belonging to the days of the Vijaya-nagara rule, does not refer itself to the reign of any Vijayanagara king, but to that of this chief Ānanda-tāṇḍavap-perumāḷ Toṇḍai-mānār, who bears a large number of high-sounding titles. The period, A. D. 1478, would fall within the reign of S'āḷuva Narasimha, and we know that Narasā Nāyaka, his famous general and later on *de facto* ruler of the kingdom, led an expedition against the Tamil country "which shook off the yoke of the Vijayanagara after the southern expedition of Kapilēśvara Gajapati in A. D. 1464." [1].

---

1. 'Further Sources of Vijayanagara History": Vol. I. pp. 167 – 173.

It is also to be noted that there is a similar inscription (No. 483 of 1938) of a chief bearing the same name Ānanda-tāṇḍavap-perumāḷ Toṇḍaimanār of Vaḻudilampaṭṭu at Elavanasur in the Tirukkoyilur taluk, dated in S'aka 1461, Viḷambi, corresponding to A. D. 1538. But some of the titles like *Mahāmaṇḍalēśvara*, *Gaṇḍa-nārāyaṇa*, *Vaḻudi-mānaṅgātta-perumāḷ*, *Tulukkar-moharan-tavirttān* etc. attributed to him (*A.R.E.*, 1938, part II. p. 106) are not found in the Chidambaram record. It is therefore doubtful whether these two persons having the same names are identical. Most probably they are different ; perhaps grand-father and grand-son.

ஸ்வஸ்திஸ்ரீ [||*] [விச]யாப்பிய சகாபுதம் ௲௪௱ மேல் [செ*]சல்லாய் நின்ற விளம்பி வருசம் காற்த்திகை நாயரு பூற்வ பக்ஷத்துப் பவுற்ன்னமையும் சுக்கிர வாறமும் பெற்ற பூச செ[நக்*]ஷத்திரத்து னுள்[1]; அதிகாலர் பரம்பராதிசரணன், ஸ்ரீ சிதம்பறநாத பாதசெகறன், காலசிவாற்ச்சனுபறன், பரராசரி கன், ராசாதிராசன், ராசபறமெசுவறன், செகப்பிராணதாறணன், திருவமல நாதன், ஆதிதேவன், அடர்திணை[2] அன்றி வணங்காத பெருமான், திருப்படி வெலைக்காறன், சகல சாஸ்த்திர புராணு கம தத்துவாறத்(தை)த விவகாற சீலன், சகல கலாவல்லபன், கதி யான பரிபாலகன், ராசசனுன சமான நிர்தாரணன், பகைமன்ன தம்பிரான் கூட்டமறுமன்னன், பகைத்த வரசர் ஆக்கந் தவிர்த் தான்,சத்திரிய காலன், சத்துருகுலாந்தகன், திர சய மணி மகுடத் தொன்,அரவெந்தர்தாழ்ந்தெல்லாம் அர(ா)சன்,பராசத்திமிர(ன்)[3] லோகசூரியன், துஷ்ட்ட நிக்கிரக சிஷ்ட்ட பரிபாலகன்,காமஷ ஸ்ரீய வெஷண சமான ரூபாதி ராமன், மநுநீதிகண்டு காணுது காட்டும் பெருமான், வாழ்வுதந்து தாழனசெய்யாத பெருமான், விருதராசவிபாடன், பூலொக நாயகன், ராசராசன், ராசகுலெந்தி ரன், அடல்நிருபர்பிடரியல் விமிகடை விரலொடு விடுசத்திரம் ஆநந்தத் தாண்டவப் பெரும[ாள் ஆன தொண்டை]டமானுர் (ப்)பெரு மான் பெரும்(செ)பற்[றப்புலியூர்] தெவர்கள் தெவன் வாச...... மடைப்பறி ...... ஷாவபிஷெகம் பண்ணிக் கொண்டு யிந்தப் புண்ணிய காலத்திலெ முன்னுள் நாம் ராசாக்கள் தம்பிரான் திருமாளிகையில் பிரதிஷ்டை பண்ணிந ஞயநாற் ஆனந்தத் தாண்டவேசுவறமு[டை*]டய நாயநாருக்கும் விக்கிரமசொழன் திருமாளிகையில் பிரதிஷ்டை பண்ணிந ஞயநாற் சமஸ்த்த லொகெச[ர*]முடைய நாயநாறுக்கும் நாயநாற் சதானந்த தாண்டவேசுவற ஞயநாயருக்கு மகாபூசை திருப்பணிக்கி திரு வம்பல மு[டை*]டய தம்பிரான் சன்னிதானத்திலெ சகியிரண்ணி யோதக தாரா பூற்வமாக கொண்டு தரும்ம சாதனப்பட்டயம். ராசாதி ராச(ராச)வள் நாட்டுக்கு ரெண்டாத்துக்கு நடுநத்தம் (த்)தெவிபட்ட[ண*]வல்லம் ஊற் யொண்ணுக்கு நான்கெல் லைக்குள்பட்ட திடற் நத்தம் உளப்பட்ட சருவமானியமாக தம்பி

---

1 'நக்ஷத்திரத்து நாள்' என்று வாசிக்க.

2 'அடலெருதிணை' என்று வாசிக்க

3 'பரராச திமிர' என்று வாசிக்க

ரான் சன்னிதானத்திலெ கல்வெட்டிக் குடுத்தபடியினுலெ யிந்த ஆற் சந்திராதித்திய வரையும் சருவமானியமாக அனுபவித்துக் கொள்ளவும் [||*].

சாசனம் - **13]** **[D.** 3328 **(c)**

மேலக் கோபுரம் கீழவாசல் கீழ்புறத்தில் எழுதியிருப்பது.

At the bottom of the eastern facade of the West *gōpura* of the temple. Dated in S'aka 1503, [Vrisha, Kumba], S'u. 14, Thursday, S'ravishṭha, (i.e., Dhanishṭha), in the regin of the Vijayanagara king **Venkatadeva Maharaya,** it records the gift of seven villages for oblations, and offerings to the god Chidambarēs'varar and the goddess S'ivakāmasundari-ammai, for lights and for Puraṭṭāsi festival and the grand festival, for the *ganda-vasanta* in the thousand-pillared maṇḍapa and the *abhisheka* of Satchidānanda by Vaiyappa-Kṛishṇappa-Koṇḍappa Nāyaka. The equivalent English date would be A. D 1582, February 21, taking S'u. 14 as a mistake for ba. 14; but the week day was Wednesday and not Thursday. [1]

ஸூஸ்தி [||*] ஸ்ரீமன் மகா மண்டலெசுவறன் அரிராயற விபாடன், பாசைக்கு தப்பு வ(ா)ராத கண்டன், கண்ட நாடு கொண்டு கொண்ட நாடு குடாதான், மூவ்வராயர கண்டன், பூற்வ தச்சிண பச்சிம உத்திர சதுச்சமுத்திராதிபதி, கெசவெட்டை கண்டருளிய வீறப் பிரதாபன், வேங்கிடதேவ மகாராயற் பிரதிவீ ராச்சியம் பண்ணியருளாய் நின்ற சகாப்பதம் ௲௫௱௩ மெல் செல்லாய் நின்ற [வி]சு ஷுத்துக் கு[ம்ப] நாயரு பூற்வபக்ஷம் ச[துர்]த்தசியும் குருவாசறமும் பெற்ற சிரவிஷ்ட்டா நக்ஷத்திரத்து நாள் வடகரை ராசாதி(ராசன்)ராசவளநாடு வெண்ணே

---

1. No. 359 of 1913, in the same place (west *gōpura*, right of entrance) and dated similarly, but in the reign of the Vijayanagara king S'rīraṅgadeva-Mahārāya (II), records the gift by the same donor of seven villages, and of income from pepper trade called *miḷagu taṛagu* for oblations and festivals in the shrines of the god and goddess. If we take the reading of the words 'விளக்குத் தற்மம்' as a mistake for 'மிளகு தரகும்' and the name of the king as S'rīraṅgadeva-Mahārāya instead of Veṅkaṭadeva Mahārāya, then probably the inscriptions are identical. A similar inscription is also found on the south *gōpura* of the temple, right of entrance, (No. 348 of 1913).

யூற் நாடு வெளுதலம்பட்டுச் சாவடி தனியூற் பெரும்(ெ)பற்றப் பிலியூற் சுவாமி சிதம்பற ஈசுவறுருக்கு அம்மை சிவகாம சுந்தரி யம்மைக்கும் கட்டளையிட வைய்யப்ப கொண்டப்ப கிருஷ்ப்ப நாயக்கறவர்கள் குடுத்த தற்ம சாதனப் பட்டயம். நம்முடக் கட்டளை நைவேத்திய திருவிளாவுக்காக புவநேகவீறப் பட்ட ணச் சீமை செங்குண்டாம்பத்தில் குமுழமலை - தாதம்பட்டு நாங்[ெ*]க[ல்*]லுக்குள்ப்பட்ட கிராமம் ரெண்டும், அறசூற் பத்து - ளேப்பத்து - குருபாடி நாங்கெல்லைக்குள்பட்ட கிராமம் ரெண்டும் தெங்கரை கொவியூற்ப்பத்து - கிராமமொண்டும் காவனூற்பத்தில் (த்)தொளுவூற்(ப்)பத்து நாங்[ெ*]க[ல்*] லுக் குள்ப்பட்ட கிராம மொண்டும் ஆக கிராமம் - ரு. இந்த கிராம மஞ்சும் சிதம்பறம் விளக்குத் தற்மம் நம்முட உபயமாகக் கட்டளையிட்ட புறட்டாதித் திருவிளாவுக்கும் பெரிய திருவிளா வுக்கும் ஆயிரக்கால் மண்டபத்திலே கெந்த வசந்தனுக்கும் சச்சிதானந்தற் அபிஷெகத்துக்குமாக அழைச்சுக்காட்டி பாத்து[1] கெங்கை கொண்டான் நாங்கல்லைக்குள்ப்பட்ட கிராமம் ஒன் றும் யெரும்பூற்ப்பத்து நல்வெளி நாங்கல்லைக்குள்ப்பட்ட கிரா மமொன்றும் ஆக கிராமம் - எ - ம் தானம் வைய்யப்ப-கிருஷ் ணப்ப - கொண்டப்ப நாயக்கவறகளுக்குப் புண்ணியமாகக் கட்டளையிட்டபடியினலெ இந்த கிராமம் யெழும் சந்திரசூரியா ளுள்ள வரைக்கும் நம்முட(க்)கட்டளையே அனுபவித்துக் கொள்ளக் கொள்ளக்கடவாராகவும்.

ஸ்வதத்தாத் திவிகுணம் புண்ணியம் பற[த]த்தாநுபாலனம்
பற தத்தாபகாரேண ஸ்வதத்தம் நிஷ்ப்பலம் பவேது.

சாசனம் - 14] [D. 3328 (a)—1.

சனீசுவர பகவானுக்கு வடக்குக் கீழ்வரிப் பெரியபட்டயத்தில் எழுதி யிருப்பது.

On the base of the wall to the north of the S'anis'vara shrine in the temple. This inscription dated in the 8th year of Sakala bhuvana-chakravartin **Avaniyalappirandan Kopperunjingadeva** records an order issued by S'ōḷakōṇ registeriag the grant of land purchased for a flower garden for supplying flowers to the god and goddess Tiruk- kāmakkōṭṭam-uḍaiya-Periyanāchchiyār and for the residence of the persons looking after the garden.

---

1 ‘அழிசுகாட்டுப் பற்று’ என்று வாசிக்க.

The temple at Chidambaram was at this time managed by a committee consisting of the following members and groups, viz. Jayatuṅgap-Pallavaraiyar, Tillai-ambalap-Pallavaraiyar, *Māhēś-varak-Kaṇkāṇi* S'*eyvār*, S'*rikāriyam-*S'*eyvār*, *Sāmudāyañśeyvār Kōyilnāyakam Śeyvār*, *Tirumāḷigaikkūṟu* S'*eyvār* and the accountants.

This inscription does not appear to have been copied by the Epigraphical department. (Vide, **Journal of the Madras University,** Vol. X, pp. 101 - 102)

ஸ்வஸ்திஸ்ரீ [||*] சகலபுவன சக்கிரவற்த்திகள் அவனியாளப் பிறந்தான் கோப்பெருசுஞங்கை தேவறுக்கு [1] யாண்டு எட்டாவது. சொழகொன் ஓலை. சொன்னவன் பிருமராயரும் [2] சய(த்)துங்க பல்லவராய[ரு](க)ம் தில்லை அம்பலப் பல்லவர(ா)யரும் உடையார் திருச்சித்தம்பல மு[டை*]டயார் கொவில் ஸ்ரீ மகெசுவற(ருக்கு)கண்ங்காணி செய்வார்தரும் ஸ்ரீகாரியமஞ் செய்வருக்கும் சாமுதாயம் செய்வருக்கும் [3] கொவில் நாயகம் செய்வாற்களும் திருமாளிகைகூ(ரு)[று] செய்வார்களும் கணக்க(ர்)[ரும்*] கண்டு விடு த[ந்த*]தாவது: கொவிலுக்கும் திருக்காமக்கொட்ட மு[டை*]டய பெரிய ஞச்சியாருக்கும் சாத்தியருள திருப்பூ மண்டபத்துக்கு முதலாகத் திருப்பள்ளித்த(று)[ா]மம் அளக்க பெரும்பத்தபுலியூர் பிடாகை மணலூரான கங்கை கொண்டு சொழ நல்லூற் செய்விக்கச் சொழ(ன்) கொன் திருனந்தவனத்துக்கு [4] திருனந்தவனத்த (ளி) [றை]க் குடலாக பொனெநந்தப் பெருமான் [5] திருனந்தவனத்துடன் குடின மக[ள*]ங்ககாறன் திருநந்தவனக் குடிகளுக்கு ஊரில் பலவ(ள)[ா]வையான நிலத்து சீவிதமாய் மாரி கை குடி[ன*] நிலம் அரையெ யிருமாவரையி(ல்)[ன்]கீள் முக்காலும் திரு(ங்)[க]களான்செட்டி உடலார் [7] கொவில் வடபக்கத்தில் யெளுந்தருளி

---

1 'கொப்பெருஞ் சிங்க தேவருக்கு' என்று வாசிக்க.

2 'தென்னவன் பிரம்மராயரும்'

3 'செய்வார்களும்'

4 'கங்கை கொண்ட சொழ நல்லூரில் செய்வித்த சொழகொன் திருநந்த வனத்துக்கு' என்று வாசிக்க.

5 'பொன்மெய்ந்த பெருமான்'

6 'மாறிக்(கை) கூடின'

7 'உடையார்'

யிருக்கும் விசுவெசுவற கொவில்[1] தானத்தார் பக்கல் விலே கொண்ட உட்படி[2] நிலம் அருமாவின்கீழ் ஒன்பது மாக்காணி அரக்காணி[யி*]நால் [வி]ரிவு நிலம் யெழு மா வர்ரெ[யெ*] அரக்காணி முந்திரிகை[க்*]கீழ் அரையும் உழைச்சாண்ணத் திருச்சித்தம்பல முடையான் நடம்பண்ணிந தெவன் பக்கல் விலே கொண்ட உள்ளூர் படி நிலம் அ[ை*]ரமா(வும்)[வின்] கீழ் முக்காலிநால் விரிவு நிலம் அ[ை*]ரமா அ[ை*]ரக்காணி முந் திரிகை கீழ்க்காலும் மவை உடையான்[3] திருனந்தவனமாகக் கொண்ட நிலம் நலமாக் கூட்டிந நிலம் யிரண்டு மரக்காணி - ஆக நிலம் ஒண்ணரையெ மூனுமா அரைக்காணி முந்திரிகை [க்*]கீழரையும் திருநந்தவநமாகச் செய்யவும். யிது திருனந்த வனத்துக்கு விலேகொண்ட சாதன[மு*]ம், குடிகாணியில் விலே கொண்ட நிலத்துக்கும் மடங்குவரி கழிக்க மூலபருழையார் எழுதின நியொகமும்......திருன்ந்தவன குடிகளுக்கு குடியிருப்பு நலமாச பரகெசரி நல்லூர்[4] மாசிலாமணி ஆண்டாரகரம் தில்லே வாழுந்த[ண] (நா)ச் சருபெதிம(ணி) [ங்]கலத்து பல[ர்*]பாகலுமா[க*] விலேகொண்டு உ[ை*]டய தென்(ஞ்) சிரகிலும் மெல்சிரகிலும் மனே கொல் முப்பதே முக்காலெரெண்டு மாவும்கால்[5] குழி யிரினூத்தி யெழுபத்தெழ(னை)[ரை]யெ மு[ன்](நூ)ருமாவும் விலேகொண்ட ஸாய(க)[ந]மும் திருக்கை ஒட்டி பண்ட[ா*]ரத்தெ ஒடுக்கவும். இப்படிக்கி திருமாளிகை யிலெ கல்வெட்டவும் கடவதாக பண்ணுவதெ. இவை சொழ [கொ*]ன் யெழுத்து. உ[6]

சாசனம் - **15**] *[D. 3328 (a)—2*

(No. 283 of 1913). On the north wall.

Record dated in the 3rd year 115th day of the Chōḷa king Tribhuvanachakravartin **Rajarajadeva** registering the gift of one *veli* of land at Vallam in Veṇṇaiyūr nāḍu, a sub-division of Rājādhi-

---

1 'விக்னெசுவரதெவர்'

2 'ஊர்ப்படி'

3 'நாவலுடையான்'

4 'நத்தமாக[ப்]பரகெசரி நல்லூர்'

5 'இரண்டு மாவினல்' என்று வாசிக்க.

6 இந்தச் சாசனத்தின் பிரதி மதராஸ் யூனிவர்சிடி ஜர்னல், X வால்யூம், 101,102—ஆம் பக்கங்களில் வெளியாகியுள்ளது.

rāja-vaḷanādu by Arayan Sōmanātha dēvan *alias* Gurukulattaraiyan of Kiḷiyūr for supplying a garland of 130 red lotuses every day during *arddhajāmapūjā*. The document representing this grant was engraved under the orders of Toṇḍaimān, the *tirumandira-ōlai* being Mīṉavaṉ Mūvēndavēḷān.

ஸ்வஸ்திஸ்ரீ [||*] திருபுவன சக்கிறவற்த்திகள் ஸ்ரீராசராசதேவருக்கு யாண்டு மூண்டு[1] ளுள் நளசுமரு. தொண்[டை*]டமானும் திருவையாருடையானும் மதுராந்த[க*] பிரம்ம[மா*] ராயனும் ஆ(வு)[ளு]டையாற் கொவிலுக்கு சாமுதாயத் திருமாளிகை[க்*] கூ(ரு)[று] தில்லைஅம்பல பல்லவராயனும் ஸ்ரீகாரியம் செய் வாற்களும் சாமுதாயம் செய்வார்களும் கொவில்நாயகம் செய் வார்களும் திருமாளிகை[க்*]கூ(ரு)[று]செய்வார்களும் செய்ய திருவாய் மொழிந்தருளினபடி : ஆவுடயாருக்கு திருவணஞ்சாமா காலத்திலே[2] செங்களுநீர்த் தி[ரு*]ப்பள்ளித்த[ா*]மத்தார் திருத் தொங்கல் செய்து சாத்த செங்கழிநீராக்கவும் ஆக்கு வார்க்கு நொதுக்கும்[3] புடவை முதல்க்கும் நித்தவிநொத வள நாட்டு ஆவூர் கூற்றத்துக் களிபூருடையன[4] அரயன் சொமனாத தெவனான குருகுலத்தரயன், ராசாதி(ராசன்)ராசவளநாட்டு வெண்ணையூர் நாட்டு வல்லத்து தன் காணியான நிலத்து ராசாதி ராசன் கமுகு திருநந்தவனத்து [க்கு] நீர்பாய்கிற மன் றெ(ரு)[று]க் கூத்தன் வாய்க்காலுக்குக் கிழக்கும் கிழியூரு டையான் அரையன் தில்லைநாயகன் நிலத்துக்கு தெற்க்கும் மெற் படியான் நிலத்துக்கு மெற்கும் (க்) காரிமங்கலமுடையானும் உள்ளியன்[5] நிலத்துக்கும் வாய்க்காலுக்கும் வடக்கும் ஆக இவை வசைநதைகக்கு நானான கெலலையூரானும்[6] நடுவு(ப்)பட்ட நிலத்து (நீர்நிலை) நீர் நிலையாய்த் திருச் செஙகழுநீர்ப் பயிர் செய்ய நிலமாகவும் பயிர்செய்பார்க்கு[7] யிலக்கைக்கும் கொத் துக்கும் நிலம் முக்காலும் ஆக வேலிநிலம் குடுத்தாநென்று[ம்*]

---

1 கல்வெட்டிலே சாசனத்தில் காலம் 'யாண்டு மூன்று நாள் நூற் றிருபத்தைந்து' என்றே காணப்படுகிறது.

2 'திருவ ர்த்த சாம காலத்தில்' என்று வாசிக்க

3 'கொற்றுக்கும்' என வாசிக்க

4 'கிளியூருடையான்'

5 'காரிமங்கலமுடையானுள்ளிட்டார்' என்று வாசிக்க.

6 'இவ்விசைந்த இன்னான்கெல்லையினும்' என்று திருத்துக.

7 'நிலம் காலும் பயிர் செய்வார்க்கு' என்று திருத்துக.

இன்னிலம் வேலியும்[தி]ருப்[பூ]தொண்டர்களுக்கு(ம்) நாயகம் ததவவீரம பாகக...மூான்[1] ஙின்றயங்கி ஆடுவானுன தில்லே அழகப்பிச்ச[னும்] திருச்சித்தம்[ப*]ல முடையான் நாலாயிர [ம்பிச்சனும்] திருநட்டப்பெருமா(ன்)நான அம்பலக்கூத்தப் பிச்சனும் பரியெறு செவுகனுன[2] இத்தருளிய ஸ்ரீபாக பிச்சனும்[3] திருநட்டமாடியான தெவர்கள்தெவப் பிச்சனும் பொய்யா நாயனுன[4] செய்யபொற்பாத பிச்சனும் நாயகனுன கருமுகார ணப் பிச்சனும்[5] திருச்சித்தம்பல முடையான் தில்லே நாயகப் பிச்சனும், உள்ளியன[6] கைக்கொண்டு இந்த நிலத்து (யூ)[ஊ]ர் மாவிந்தக் கடமை யிருத்துக் கடமைசெய்து[7] இறை மிகுதி கொண்டு நாளொண்ணுக்கு நூத்திமுப்பது திருச்சங்கனு நீர் திருப்பள்ளித்தறமம் நித்தப்படிக்காணி அளப்பார்கள். சாத னம் பண்ணித்தந்தா ராசாதிராச ரென்றும் இ(ய)த திருக்கை ஒட்டியிலெ ஒடுக்கவும் உ. இத் திருப்பள்ளித்தாமம்(த) திருத் தொங்கலாக செய்(வ)து திருவஞ்சாமா காலத்திலெ[8] சாத்தவும். இப்படிக்கித் திருமாளிகையிலெ கல்வெட்டவும் கடவதாக...ற வெணுமென்று தொண்டமான்தான் நமக்குச் சொன்னமயில் இப்படி செய்யக்கடவதாக சொன்னெம். இப்படி செய்ய பண் ணுவது யெழுதிநான் திருமந்திரஓலே பண்ணவன் மூவெந்த வெளேநார நென்றும் இப்படித் திருவாய் மொழிந்தருளிநார் தொண்ட யெழுத்தியென்று. இவையெ நாட்டாரெழுத்தென்று இவை செதிகுலராயன் எழுத்தென்றும், இவை சித்திராயன் யெழுத்தென்றும். இவை யெளந்தி [பனநிடன] யெழுத்தென் றும் பிரசாதம் செய்தருளிந. செய்யும் படி உ.

சாசனம்—**16, 17**] [D. 3352—1 & 2

*பின்வரும் இவ்விரண்டும் மூன்றும் மதிலில் எழுதியிருப்பனவாகக் குறிக்கப் பட்டுள்ளன. இரண்டும் ஒரே சாசனத்தின் பகுதிகளாக இருக்குமோ வென்று எண்ண வேண்டியிருக்கிறது.*

---

1 'குவளேப்பாச் [கக்*] கிழான்' என்று வாசிக்க
2 'பரியேறு சேவகனுன' என வாசிக்க.
3 'ஸ்ரீபாதப்பிச்சனும்'
4 'பெரிய நாயனுன'
5 'திருமூலகாரணப் பிச்சனும்'
6 'உள்ளிட்டார்'
7 'இறுத்துக் குடிமை செய்து'
8 'திருவஞ்சாம காலத்திலெ' என்று வாசிக்கவும்.

On the third wall. The following two fragments, though copied and numbered separately, appear to be portions of one and the same inscription, dated in the 48th year of **Tribhuvanachakravartin Kulottungachola deva.** The portion available is too fragmentary.

*16* ஸ்வஸ்தி[||*] திருபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தெவர்கள் யாண்டு ச எட்டாவது[1] கும்பஞயத்து ருபசித ெ......தது பெத்த திங்கள் கிழைமையும்.............யும் மானணடு விருதராசபயங்கர.........ட்டு சருவணை விளநாட்டுப் பஞ்ச[வ*] ன் மா...றத்தூருக்கு...ச யை யநத காத்தார.........ருடயான் வெளான் சொழந் தெ...............யன் முவெந்த வெளானும் பெரு.........உ[டை*]யான் வெளான் தில்லையாணின............ குலொத்துங்கச் சொழ....த வெள[ா*]னும் பெருமங்கலந்........

*17.* ...ர உ[டை]டயான் வெளான் சொனனர...ககமுவெந்த வெளானும்மெல் ஊர் உ...மூவடிகள் அம்பலம் கொவில் கொ... கெங்கைகொண்ட சொழன் முெ......யூற்றுட்டு முவெந்த வெளானும் நல்லூர் உடயான் வெளான் படிதாங்கள் செம்பிய காயனும் அருஞ்சியனுபெரு............நல்லூர் உ[டை*]டயான் இரண்டாம் வெளான் தாங்கியும்கொட்டூர் உடயான் திருச்சித்தம்பல முடையான் சீராள தெவனும் பெலு.........யான வெளான் னவா மெருக்கு மெலூ......யான் வெளான் பள்ளிக்கொண்ட[ா*] னும்............ாக் கெழவன் யெடுத்தாங் செமலவனும்........... கநல்லூர் உ[டை*]டயான் வெளான் ராசாதி ராசஉ..........சொழ வெசா(ரி)[லி]ப்பா(ஊ)[டி] மூவெந்த வெளாங்.........கொங்க நல்லூருடையான் ஞலாம்வெள............குடிதாங்கியும் கொளத்தூர் உடையாஞ.........தம்முடக்குத்திய தெவனும் கெட்டு உடையான் தனயன் பிருங்கபாணியும் அரிஞ்ச[ய*]நல்லூர் உடையான் வெளான் ஆதித்தியதேவனும் அரிஞ்சநல்லூர் உடையான் வெளான் செக்கடிகளும் பொன் வாணியன் வெ(ங்)[ண்] காடன் சொனும் நெடுவை உடையான் செ[ச]ட்டிக்குத்திய தெவனும் நல்லாத்தூர் உடையான் கண்டியூரர் குமரனும் நெடுவை[ய*]லு(டை*)டயான் குடிதாங்கி சியார தெவனும் பெருமங்க நல்லூர் உடையான் அரையன் பொண்ணமுதும்

---

1 'நாற்பத் தெட்டாவது' என்று இருக்கவேண்டும்.

பெருங்கநல்லூர் உடையான் வெளான் செலவனத்துங்கடத் தானும் பள்ளியூர் உடையான் சடயன் சொன்னவித்துவாநான பனையூர் நாட்டு யெழுவந்த வெளானும் வெள்ளி வயிலூர் உடையான் பாலை சம்பந்தனும் உள்ளிட்ட நகரத்தொம். ராசாதிராச வளநாட்டு தனியூர் பெரும்பற்றப் புலியூர் உடையார் திருச்சித் தம்பல முடையாருக்கு உய்யகொண்டார் வளநாட்டு பெரூர் நாட்டு இலங்காரி பெருங்கநல்லூர் உடையான் இரண்டாம் வெளான் குடிதாங்கியும் கொட்டூர் உடையான் திருச்சித்தம்பல முடையான சீராள தெவனும் மெலூர் உடையான் வெளான் வைரமெகத்தும் மெலூர் உடையான் வெளான் பள்ளிகொண் டானும் குட்டியூர் காருடையான் கொ(ண்)[ன்] ராசாதி ராச னுக்கு சொழ அனந்தபாலன் செ[ய்]வித்த திருநந்தவனம் ராசாதிராச நிலம் குடிகள் ஆளுவாக்குடவை முதல் உள்ப்பட [நில]னூர் ளுள் - க - ன்றுக்கு [செ*]நல்லு கலமாக இவர்களு டைய நெல்லுக்கு யிந்த ராசெந்திர(ச்)சொழன்......

சாசனம் — **18**] [D. 3352—3

(No. 280 of 1913.) [On the north wall of the first prakara.]

Dated in the 14th year and 107th day of the Chola king Tribhuvana chakravartin **Rajaraja deva,** it records the gift of land at Tiruniṟṟuch-chōḻa-maṅgalam by a certain Kaliṅgarāyan for supplying 500 jack fruits, 5000 mangoes and 5000 plantains to the temple of Āḷuḍaiya-nāyanār. The assembly of that village agreed to make the land rent-free by charging the taxes due on it to the village. The *tirumandira ōlai* was Neṟiyuḍaiyachōḻa Mūvēndavēḷan.

ஸ்வஸ்திஸ்ரீ[||*] திருபுவந சக்கிரவற்த்திகள் ராஜராஜதேவருக்கு யாண்டு பதினலு நாள் நிருழுசு.[1] காங்கெய ராயனும் [திரும]ஞ்சன ம[ழ](ம)கியானும் தென்னவன் ஸூஹூ ராய னும் ஆளு[டை*]டய நாயனர்கொவிலுக்கு ஸ்ரீகாரியம் செய்வார் களு(க்கு)ம் ஸாமுதா[ய](ன)ம் செய்வார்க[ளு](க்கு)ம் கொவில் நாயகம் செய்வார்களும் திருமா[ளி]கை[க்*] கூ(ரு)[று] செய் வார்களும் செய்ய திரு[வாய்] முழிந்தருளுனபடி: ஆளுடைய னய நார்[க்கு*] உய்யக்கொண்டார் வளநாட்டு அ[ம்பர்நாட்டு அம்ப ரரு]வந்தை அரயன் சிவெதவன பெரும[ரனை] காலிங்கராயன்

---

1 'நூற்றெழு' என்று வாசிக்க.

பிலாப்பழமும் மாம்பழமும் வாழைப்பழமும் அமுது செய்விக்[கைக்கு] ராசாதிராச வளனாட்டு திரு(வந்து)[விந்தனூர் நாட்டு மாற்]ப்படுகையான அழகிய சொழச் சதுப்பெய்திமங்கலத்து பிரந்த திருநீத்து[ச்சொழ மங்]கலத்து இவள் காணியான நிலத்[துத் திருநா]மத்துக்காணியாகக் குடுத்த நிலம் ஒன்[றெ]ற யிரண்டுமாவும் பதினாலாவது முத[ல் சந்திராதித்த]ல்வரை ஊர்க்கிழ் இரையிலிய[ாய் ஊற்] மரவிந்த[1] கடமைகள் ஊரிலெ [எற்றி இறுக்க]க் கடவதாக ஸஹாஸஹா நியொகமும் எ]ழுதிவித்து இந்த நிலம் இவ்வூர்க் கா[ணி உடைய] கூபத்து[2] உதய நிவாகறன் இளைய [பெருமா]னன மாதெவ(ப்) பட்டன் கைக்க்கொண்[டு அ]னுப(பி)வித்து ஆட்டைக்கு (ஞ்சசிர)[ஐஞ் ஞூறு] பலாப்பழ[மு*]ம் ஐய்யாயிரம் மாம்பழமும் ஐ[ய்*]யாயிரம்[வாழை]ப்பழமும் ஆக வந்தது திருமடை[ட]ப்பள்ளி [க்கு*] முதலாக யெண்ணவும். யெண்ணுமிட[த்து]பலாப்பழம் தை[யி] மீ ௨ முதல் ஆவணி மீ [வரை] யிலும், மாம்பழம் சித்திரை மீ ௨ முதல் ஆ[வணி]மாசம் வரைக்கும், வாழைப்பழம் புரட்டாசி [மா]சம் முதல் மாசிமாசம் வரையிலும், நா[ள்விழு]க்காடுகளுலெ யெண்ணவு கடவனாக [இ]த்திட்டும் கொண்டாரென்றும் இத்திட்டு[ம் ஸ]ஹ[ா*]ஸஹா நியொகமும் திருக்கை ஒட்டியி[லெ ஒ]டுக்கவும். இப்பிலாப்பழமும் மாம்பழமும் வா[ழை*]ழப்பழமும் யிப்படி யெண்ணிவித்துக் கொண்டு அமுது செயி(த)தருளப்பண்ணவும். இப்படிக்கித் திருமாளிகையிலெ கல்வெட்டவும் கடவதாகப் பெ(ரு)[ற]வெணுமென்று காலிங்கராயன் நமக்குச் சொன்ன[மை*]மயில் இப்படி செய்யக் கடவதாக சொன்னொம். இப்படி செய்யப்பண்ணுவது. யெழுதினான் திருமந்திர ஓலை நெரியு[டை*]டய சொழ மூவெந்தவெளாநென்றும் இப்படி திருவாய் மொழிந் தருளிநார் இவை செதி[ய*]ராய நெழுத்தென்றும் இவை (பகுதிங்க) [பிரிதிவிகங்]கரயன் யெழுத்தென்றும் இவை சிமபௌமுயன் யெழுத்தென்றும் இவை இலங்கேசுவறன் யெழுத்தென்றும் இவை அமரகொ நெழுத்தென்றும் இவை காங்கயராயன் யெழுத் தென்றும் பிரசாதம் செயிதருளி வந்த செய்யும்படியும் ராஜாயிராஜ வளநாட்டு திரு விந்த[னூ*]ர் நாட்டு மார்படுகையான அழகியசொழச்சருப்பெதிமங்கலத்து பிரந்த திருநீத்துச்சொழ மங்கலத்து பெருமங்கலத்துப் பெரு(ம்)ங்

1 ‘ மாவிந்தக்’ என்று வாசிக்க

2 ‘ கூவத்து ’ எனறு வாசிக்க.

குறி மகாச[பை*]பயார் இவ்வூர் பெருங்குரைத்[1] தென்கண்டத்து ராசாதிராசன்கொளத்தூர் யெல்லேக்கு மெற்க்கும் காெ(ய)[வ]ரி நீரொடு காலுக்கு வடக்கு சிவந்த செவடி உள்ளிட்டார் நிலத்துக்கு கிழக்கும் பெருவழிக்கி தெற்கும் நடுவு(ம்)பட்ட நிலம் ஒன்றெ யிரண்டுமாவினுல் வந்த கடமைகள் ஊரிலெ யெற்றி இறுக்க சந்திராதித்தியவரை [இறை*]யிலியாக ஷுஹிஅனெஸ்ஹுஸ ஷெவர் திருநாமத்து - யெழுதி தந்த மகாசபா நியாகமும்-இந்த மகாதெவபட்டன் இன்னுள் விளுக்காட்டிலெ திரும[ஞ*]டப்பள்ளி பண்டாரத்தெப் பலாப்பளம் ஞற்சாண் சுத்திலெ யிரணூரும் மூண்[ற*]ரைச் சாண் சுத்திலெ நூத்தன்பதும் முச்சாண் சுத்திலெ நூத்தன்பதும் ஆக ஐந்நூரும் அமுதுபடி [க்*]காந்த (ரி)[ர]த்திலெ ஐய்யாயிர மாம்பழமும் [மெற்]படி மாவுக்கு ஒக்க ஐயாயிரம் வாழைப்பழமும் யெண்ணி [த்*]தர(க)[வு] கொள்ளவும் இட்ட தீட்டு ஒடுக்கி கல் வெட்டியது. [||*].

சாசனம் — **19**] [D. 3353-1

மூன்றும் மதிலில் எழுதியிருப்பது.

(No. 281 of 1913). On the third wall. An inscription dated in the 10th year 335th (which is a mistake for 235th) day of the reign of the Chōḻa king Tribhuvana-chakravartin **Rajarajadeva** recording the gift of two private individuals for a flower garden. Provision was also made for the servants who looked after the garden.

ஸ்வஸ்திஸ்ரீ [||] திருபுவன சக்கிர வற்த்திகள் ஸ்ரீ ராஜராஜதேவற்க்கு யாண்டு பத்து நாள் முன்னூற்றி முப்பத்தி அஞ்சு. தொண்டமானும் திருமஞ்சனகிமையானும் தென்னவன் பிரம்மராயனும் ஆளுடைய ஞயனர் கொவிலுக்கு ஸ்ரீ காரியம் செய்வார்களும் சாமுதாயம் செய்வாற்களும் கொவில் நாயகம் செய்வாற்களும் திருமாளிகைக்கூரு செய்வார்களும் செய்யத் திருவாய் மொழிந்தரு(ள)[ளி][ய*]படி உ ஆளுடைய ஞயநாருக்கு உய்யக் கொண் [ட*]ார் வளநாட்டு அம்பர் ஞட்டு அம்பரருவந்தை அறயன் நீறணிய வழக்குளானன காலிங்க ராயனும் ருசாதிராச வளநாட்டு பெரும்பற்றப்புலியூர் பிடாகை மண்ணைக்காஞந்த நல்லூரில் ஒரு மாநிலம் திருநந்தன வனமாக செய்வித்த இதுக்குத் திருப்பள்ளி த(று)[ா]மம் அளந்து வருகுற [தி](நி)ரைமூறுடையான வந்தான் ெ.........கள தெவனுக்கும்

1 'பெரு நான்கெல்லே' என்று இருத்தல் வேண்டும்,

கொலத்துடயான் திருஞானசம்மந்தனுக்கும் இலக்கை[க்]கும் கொத்துக்கும் யிவ்வூரிலெ வெலி நிலம் வெலே கொண்டு குடுத்து இவர்கள் பெற்-க-க்கு னுள் க (க்கு) ஒண்ணுக்கு குருணி னுளியாக வந்தத் திருப்பள்ளி த(ரு)[ா]மம் அளந்த வாராக நின்ருர் க[ெ*]ளன்றும் அரயன் இன்ன தெவனுன வாணுதி ராசனுக்கு ரெண்டு பெரும் அரையன் திருவலஞ்சுளி உடையா னுன வாணுன வாதி ராசனுக்கு முண்டு பெரும் அரயன் சிவ தெ வன் பெருமானுன காலிங்க ருயனுக்கு' மூண்டு பெரும் - இவன் மாதா ஆளவந்தாளுக்கு - யிரண்டு பெரும் யிவன் மகள் யிரா [ச*] ரா[ச*]தெவக்கு இரண்டு பெரும் முதல்க் கொண்டு இப் பெர்க்குக் கூத்தாங்கி மாணுளுடையானும் சி[ெ*] வதன பெரு மானும் தம்பியும் திரு நட்டப் பெருமானும் இரையூருடை யானும் பொன்னம் பலக் கூத்தனும் மயிலாப் புடையான் உமை யுருக ஆடுவானும் திரைமூருடையான் தும்பிக்கையனும் ஆக யெழுபெற் ஆளுடைய னுயனுருக்கும் யெய்யனூ ருடையான் அற் புதக் கூத்தனும் பெலூ ருடையான் னின்றயங்கி ஆடுவாரும் வெளூர்க் கிழவன் திருமஞ்சனம [மு*]கியானும் கூற்றுங்கியான அனும சுவ சுவரமுடையானும் குணவாயலுடயான் திருநட்டப் பெருமானும் ஆக அஞ்சு பெர் திருக்காமக் கொட்டமு[ண*]டய பெரிய நாச்சி யாருக்கும் பெர் ஒண்ணுக்கு னுளொண்ணுக்கு குருணி னுநாழியாக வந்த திருப்பள்ளித் த(ரு)[ா]மம் திருப்பூ மண்டபத்துக்கு முதலாக அளக்கவும். இதுக்கு இன்னுட்டுவெண் ணெயூர்னுட்டு ராசசூரிய சருப்பெத்திமங்கலத்து காலிங்கராயன் வெலேகொண்ட ஊர்ப்படி நிலம் இரெண்டுமாக் காணியும் திருநந்த வனமாக செய்யவும். வடனுலூரான விசுலாதிகலி வெகம மங்க லத்து இவள் விலேகொண்டு பொத்தகப்படி நிலம் இருபத்தெழெ யிரண்டுமா அரைக்காணி முந்திரிக்கைக்கு[கீழ்] முக்காலெ மூண்டுமா நிலம் இவர்களுக்கு - காணியாய்க் கடமை குடிமை இறுத்து மிகுதி இவர்களுக்கு யிலக்கைக்கும் கொற்றுக்கும் யிந்நிலம் நீக்கி நிலம் இருபதித்து வெலியும் ஆளுடய னுப நாருக்கு திருநாமத்துக் காணியாய் கடமை குடிமை இறுத்து முகுதி தைய் மாசத்து பூசத்துனுள் திருப்பாவா[டை*]யில் அமுது செயிதருள திருப்பாவாடை ப்(ா)[பு]றமாகவும் குடுத்தா ரென்றும் இன்னிலங்கள் பலவாவை உடயான கூட்டவும் விலே கொண்ட பிருமாணங்கள் திருக்கை உடைமையிலே ஒடுக்கவும். இப்படிக்கி குலொத்தங்க சொழன் திருமாளிகையிலெ கல்வெட்

2 'சிவெதவனப் பெருமானுன காலிங்கராயன்' என்று வாசிக்க.

டவும் கட[வ*]தாகப் பெருவெணுமின்று சொன்ன[ை*]மயி லிப்படி செய்யக்கடவதாக சொன்ஞெம். இப்படி செய்யப் பண் ணுவது. யெழுதினான் திருமந்திர ஓலே நெரி(வு)[யு] [ை*]ட சொழ மூவெந்த வெளாநென்றும் இப்படி திருவாய் மொழிந்தரு ளிஞர் இவை வில்லவராய நெழுத்து யென்றும் இவை விழுப்பா யராச நெழுத்தென்றும் இவை செதிகுலராய நெழுத்தென்றும் இவை இலங்கெசுவர நெழுத்தென்றும் இவை அமர கொநெ ழுத்தென்றும் இவை காங்கயனுயநெழுத்தென்றும் பிறசாதஞ் செயிதருளி வந்த செய்யும்படியும் அகரம் ராசசூரிய சருப்பெதி மங்கலத்துப்பிடாகை-ராஜ மானியநல்லூற் பால் சி[ெ*]வதவனப் பெருமான் திருநந்தவன மென்றும் பெரார்செய்த ஸ்ரீதெவி வதிக்கு தெற்க்கு குலொத்துங்கச்சொழ வாய்க்காலுக்கு வடக்கு- உ கூ. ச(த்)திரத்துக் கிழக்கடைய ரு. [1]......நீக்கி இதின் மொர்க்கு ரு...இதில் தென்கிழக்கடைய ரு...நீக்கி நீக்கி ரு......மஉ. ச(த்)தி ரத்து நிலம் ரு...ஆகத் திருநந்தனவன நிலே மலே செம்பியன் சாத்த பலாடிக்கும் பஞ்சவன் - ஆத்துக்கு கிழக்கும் இவ்வாத்தில் தலே பெற்று அரவணே வா[ய்*]க்காலுற்ற தெருவில் வாய்க்காலுக்கு தெற்க்கு - இந்த அரவணே வாய்க்காலுக்கும் நடுவில் மாத்தூ ரெல் லேக்கும் மெற்க்கும் குமாரருக்கும் யெல்லேக்கு வடக்குங் கிழக்கும் மல்லன் வாய்க்காலுக்கு வடக்கும் நடுப்பட்ட வடநாலூ பொஸ்த கப்படி ரு உமகூ. ஸஸதமும்......இதல் முதருசுவறமுடையா ருக்கும் திருவ[க*]த்தீசுவறருடையாருக்கும் தெவதானம் பொஸ் த[க*]ப் படி. உமஎ. ரு ஸஸ்தமும்.........இதில் எஸக ஸ்தமும் நிலம் கிடமை யிருத்து சிறைமிகுதி திருநந்தவனக் குடிகளுக்கு இலக்கைக்கும் கொத்துக்கும் நீக்கி நிலம் உம [வெ*]வியும். கடமைக்கு ஹற்று இதை மிகுதி யாலுள்ளது திருத்தெ(ர)[த] பூசத் திருஞரில் திருப்பாவாடை அமுது செய்தருள வெண்டு வன்னவற்றுக்கும் உடலாகவும் ஆரும் - உமஎ - ஸஸ்தமும் கூட ....வும் திருஞமத்துக்காணியாக விட்டபடிக்கி அம்பரருவந்தை அரைய[ன்*] சி[ெ*]வதவன பெருமாஞன காலிங்கராயர் யெழுத்திட்டப் பிரமாணமும் இன்னிலங்கள் வி[ை*]ல(க்) கொண்ட பிரமாணங்களும் திருக்கை ஒட்டியில் ஒ[டு](ட்டி)க் குன[ை*]மக்கி கல்வெட்டியது.

---

1 'நிலம்' என்பதே ரு என்னும் குறியீட்டால் குறிக்கப்பட்டுள்ளது. நிலத்தின் பின்ன அளவைக் காட்டுவதற்காகக் கொடுக்கப்பட்டுள்ள இலக்கங் களுக்கு ஏற்ற உருவங்கள் கிடைக்காமையால் அவை இவ்விடம் கொடுக்கப் படவில்லே. அந்த இடம் புள்ளியிட்டுக் காட்டப்பெற்றுள்ளது.

சாசனம் — **20**] [D. 3353—2.

*வடவண்டை மதில் சாசனம்.*

(No. 266 of 1913) [On the east wall of the first prakara.]

Record of the 16th+1st year, 272nd day of the Chōḷa king Tribhuvana chakravartin **Rajaraja deva** registering the gift of land belonging to Arayan S'rī Vēdavanaperumāṉ *alias* Toṇḍaimaṉ of Ambar Aruvandai ot Ambar-nāḍu, a district of Uyyakkoṇḍar Vaḷanāḍu, in the village of Pāṇḍūr *alias* Kulōttuṅgaśōḻan Vallam in Rājadhiraja vaḷanāḍu for maintaining the feeding house named Arapperuñjelvi-S'ālai at Perumparrappuliyūr in the west street called Muḍittalaigoṇḍa perumāḷ tiruvīdi.

ஸ்வஸ்திஸ்ரீ [॥*] திருபுவநச் சக்கிரவிற்த்திகள் ஸ்ரீ ராசராச தேவ ருக்கு யாண்டு (பதி) பதினாராவதேன்று கிராம மாண்டு நாள் யிர ணூத்தி யெழுபதுணுயிரம நாடு[1] காங்கயராயனும் திருமஞ்சனம் அழகியானும் தென்னவன் பிரமராயனும் ஆளு[டை*]டய ஞய நாற் கோவிலுக்கு ஸ்ரீ காரியம் செய்வார்களும் சாமுதாயம் செய் வாற்களும் கோவில் நாயகஞ்செய்வாற்களும் திருமாளிகை கூரு செய்வாற்களும் செய்யத் திருவாய்மொழிந்தருளினபடி; உய்ய(ா) கக்கொண்டார் வளநாட்டு அம்பர் நாட்டு அம்பரருவந்தை அரயன் சிவேதவன பெருமானுன(த்) தொண்டமான் பெரும்பெற்றப் புலியூற் முடித்தலைக்கொண்ட பெருமாள் திருவீதி மேலைத்திரு வீதி கீழச்சிரகில் யெடுப்பித்த அறப் பெருஞ்செல்வி சாலையில் உண்ணும் ஆதுலற்கு அரிசியும் கறி விறகு உள்ளிட்ட விஞ்சனத் துக்கும் அடுவார்த் தண்ணீர் வார்பாற்க்குஞ் சாலை அழிவு கொரவும் உள்ளிட்டு வெண்டுவனவை யாத்துக்கு இரை மிகுதி கொண்டுசெய்ய இவன் காணியான நிலத்துத் தந்த ராசாதிராச வளனாட்டு பாண்டூரான குலோத்துங்கச் சோழன் வல்லத்து நிலமாய் ராசராசன் அம்பர் யென்னும் பெறவேணு மிடுக்கச் சொன்ன நிலம் நாற்பத்தி நாலெகாலும் பதினாராவதி னெ(கி) [தி]ருமாண்டு பிசானமுதல் யிச்சாலைக்கிக் காணிக்கைக் கொள் ளவும். இந்த நிலத்துக்கு இவன் தந்த சாதனம் திருக்கை ஓட்டி யிலெ ஓடிக்கி வைத்துக் கொண்டு இப்படிக் குலொத்துங்கச் சொழன் திருமாளிகையிலெ கல்வெட்டவும் கடவதாகப்(ப)

---

1. 'யாண்டு பதினாருவதற்கெதிராம் ஆண்டு நாள் இருநூற்றெழுபத் திரண்டு' என்று வாசிக்க.

பெறவெணும் யென்று இவன் நமக்கு சொன்ன[மை*]மயில் யிப்படி செய்யக் கடவதாகச் சொன்னெம். இப்படி செய்யப் பண்ணுவது. யெழுதினான் திருமந்திர ஓலை நெரியுடய சொழ மூவெந்த வெளாயென்றும் திருவாய் மொழிந்தருளினார் இவை செதிரா[யன்*] யெழுத்தென்றும் இவை காலிங்கராயன் யெழுத் தென்றும் இவை விழுப்பாதிராயன் யெழுத்தென்றும் இவை செதி குலராயன் யெழுத்தென்றும் இவை காங்கெய ராயன் யெழுத்தென்றும் பிரசாதம் செயிதருளிவந்த செய்யும்படி கல்வெட்டியது.

சாசனம் —21] [D. 3353-6

வடவண்டை மதிலில் உள்ள சாசனம்.

திரிபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழனுடைய திருத்தங்கையான ராசராசன் குந்தவை யாழ்வார் ஆளுடையார் தண்ணீர் அமுது செய்தருள குடிநறகல் நிறை மதுராந்தகன் மாடையோடு ஒக்கும் பொன் ஐம்பது கழஞ்சில் ஒரு பாத்திரம் (மிண்டம்) அளித்த செய்தியைக் குறிக்கிறது. இன்னும் உடையார் ராசேந்திர சோழ தேவர்க்குக் காம்போஜத்து அரசன் காட்சியாகக் காட்டின கல் ஒன்றைத் தில்லைநாயகர்க்குத் திருக்கண்ணுடியாக இட்ட செய்தியையும் தெரிவிக்கிறது.

இது எபிகிராபியா இந்திகா V வால்யூம் 105-ஆம் பக்கத்தில் பதிப்பிக்கப் பெற்றிருக்கிறது. [1]

---

1. இந்தச் சாசனம் உரைநடை, செய்யுள் ஆகிய இரண்டும் கலந்து எழுதப் பெற்றது. சாசனத்தின் காலம் செய்யுளிலே தான் உள்ளது. அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தமாக உள்ள அது பின்வருமாறு அமையும்.

நானிலத்தை முழுதாண்ட சயதரற்கு நாற்பத்து
நாலா மாண்டில்
மீனநிகழ் ஞாயிற்று வெள்ளிபெற்ற உரோகணிநாள்
இடபப் போதில்
தேனிலவு பொழில்தில்லை நாயகர்தம் கோயிலெலாம்
செம்பொன் வேய்ந்தாள்
ஏனவருந் தொழுதேத்தும் ராச ராசன்
குந்தவைப்பூ விந்தையாளே,

சாசனம்—**22 (அ)** ] [D. 3353-7

பரவை நாச்சியார் கோவிலுக்குச் சாசனம் இருந்ததற்கு நகல்.
வடவண்டை கர்ப்பகிருகத்தின் மதிலில் இருக்கிறது.

Two fragments relating to Paravai Nachchiyar shrine found engraved on the north wall of the central shrine and on the wall to the south of the entrance to the central shrine.

........ஸ்ரீ மாகெசுவரற் கங்காணி செய்வார்களும் ஸ்ரீ காரியம் செய்வாற்களும் பெரும்பற்றப்புலியூற்ப் படாகைத் தன்னிலம் அன்னதான கட்டளை........

**22. (ஆ)**

கர்ப்பகிருகம் வாசலுக்குத் தென்புறம் மதிலில் இருப்பது.

...........ஸ்ரீ திருச்சித்தம்பலமு[டை*]டையாற் ராசதெவறுக்கு யாண்டு யிருவத்திநாலு......செய்வ[ா*]ற்களும் செய்ய திருவாய் மொழிந்தருளும்படி[......]வள நாட்டுப் பெரும்பற்றப் புலியூற்ப் படாகை உளப்பட்ட நிலம் ஊற்...........

[குறை எழுத்துக்கள் தெரியவில்லை]

சாசனம்—**23**] [D. 3353-8

சபைக்குக் கீழ்வாசல் வடபுறம்

On the northern side of the eastern facade of the Sabhai. An inscription dated in S'aka 1436, Bhava, Tulā, Su. 12. (i. e., *utthāna dvādaśi*), Monday, S'ravaṇa, in the reign of the Vijaya-

---

இதிற் குறிக்கப்பட்ட காலம் கி. பி. 1114-ஆம் ஆண்டு மார்சு மாதம் 13-ஆம் தேதி யாகும். தவிர, தில்லையம்பலத்துக்குப் பொன் வேய்ந்த புகழில் முதற் குலோத்துங்க சோழன், விக்கிரம சோழன் ஆகியவர்களுக்கு உள்ளதைப் போலக் குந்தவைக்கும் பங்கு உண்டு என்பது தெரியவரும்.

*காம்போஜத்து அரசன் காட்சியாகக் காட்டிய கல்லைக் கண்ட மன்னனை ராஜேந்திரசோழனை முதற் குலோத்துங்கன் என்றே கொள்வர் 'எபிகிராபியா இந்திகா' வில் இந்தச் சாசனத்தைப் பதிப்பித்த ஆசிரியர். ஆயினும் சமீபத்திலே கிடைத்துள்ள கரந்தைத் தமிழ்ச் சங்கச் செப்பேடுகளினின்றும் அவன் முதலாம் ராஜேந்திர சோழனாகவே இருத்தல் வேண்டுமென்று தெரிகிறது.* Journal of Oriental Research, Vol. XIX, p. 151.)

nagara king **Krishnaraya Maharaya** registering the gift by Munnappa Nāyaka, son of Mallappa Nāyaka, of 17¼ *vēli* of land punchased by him at Uttamas'ōḻamaṅgalam, in his domain, Dēvamaṇḍalaśirmai, to the god Tiruv-ambalam-uḍaiya-Nayaṉar at Perumpaṟṟappuliyūr for the merit of his father and for both his maternal and paternal families. It also provided that from the land and its income, a flower-garden was to be raised, a choultry (*śattiram*) constructed and twelve Brahmaṇas fed there daily.

The date is irregular. But the corresponding year would be A.D. 1514.

ஸ்வஸ்தி[॥*] ஸ்ரீமன் மகாமண்டலேசுவறன், அரி(சா)ராய விபாடன், பாஷைக்கி தப்புவாய கண்டன், மூவராய கண்டன், கண்ட நாடு கொண்டு கொண்ட நாடு குடாதான், பூற்வ தக்ஷிண பச்சிம உத்திர (சத்த)[சதுர்] சமுத்திராதிபதி, ஸ்ரீ ராசாதி ராச பறமேசுவறன் ஸ்ரீ வீரப்பிரதாப ஸ்ரீ கிருஷ்ணராய மகாராய[ர்*] பிரதிவி ராச்சியம் பண்ணி அருளாநின்ற சகா(ஸ்த)ம், ௲௪௱௩௰௬-க்கு மேல் செல்லா நின்ற பவ ஸம்வத் து(ய)[ல]ா ஞயர் பூற்வ பக்ஷத்து உத்தான துவாதசியும் சோமவாறமும் பெற்ற திருவேண நக்ஷத்திரத்து ஞள்: சோழ மண்டலத்து வழுதலம்பட்டுச் சாவடிக்கு [ச்செர்ந்த*] ராசாதிராச வளநா[ட்*]டு தேநூற்ப்[1] பெரும்(்)பற்றப் புலியூரான திருவம்பல மு[டை*]டய தம்பிராநாற் அருளிச்செய்த படிக்கி சண்டேசுவரன் வச(ல)[ம்] மல்லப்ப நாய்க்கர் புத்திரன் முன்னப்ப ஞயகர் குடுத்த திருமுகம். நம்முடைய தேவ மண்டலத்துச் சீமையான கீழ்ப்படாகை உத்தம சோழ மங்கலத்து நத்தத்துக்கு கிழக்கு பற வீரமான பா[ய்*]ச்சலிலே தமக்கு கிரயமாக - ௰௭¼ - க்கு பண்ணித்தந்த நஞ்சை நிலம் ௰௭வ. இந்த பதிநேளே கால் வேலியும் விலைப்பிரமாணமாக பண்ணித்தந்த படியிஞலெ இந்த நிலம் தம்முடைய மாதுரு வம்சம் பிதுரு வம்சத்துக்கும் புண்ணியம் வித் தினம் பனிரெண்டு பிராமண போசனத்துக்கு பிரமாணமாகப் பண்ணிக் குடுத்த படியிஞலெ சத்திர மிடவும் நந்தன வனம் வைக்கவும் யிந்த நிலம் ௰௭வ வேலியும் சிதம்பறஞத தெவருக்கு சகிரண்ணியோதக தாராபூற்வமாகத் தருகையில் யிதுக்குத் தினம் பனிரெண்டு பிராமண போசனத்துக்கு சத்திரமிடக் கட்டளையிட்ட நிலம்-௰௨ சத்திரம் சுவயம்பாகிக்கி நிலம் க. நந்தனவநத்துக்கு நிலம் [வ*]

1. 'தனியூர்ப்' என்று திருத்தி வாசிக்க.

*55* [*D. 3679*

கர்ப்பகிருகத்துக்குத் தென்பாரிசம் தக்ஷிணாமூர்த்திக்குக் கீழ்புறம் விமானவரியில் எழுதப்பட்டுள்ளது.

*56* [*D. 3662*

மகாமண்டபத்துக்குத் தென்பாரிசம் விமானப்பட்டி வரியில் எழுதியிருப்பது.

இவ்விரண்டும் ஒரே சாசனத்தின் முற்பகுதியும் பிற்பகுதியும் ஆகும்.

சகலபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீ மணவாளன் பெருமாள் உடையார்க்கு ஐந்தாம் ஆண்டுக் கல்வெட்டு. சேந்தமங்கலத்தைப் படைவீடாகச் செய்து வாணிலே கண்டீசுரமுடைய நாயனாரையும் எழுந்தருளப்பண்ணி அவருக்கு அவன் ஏற்படுத்திய ஏழிசை மோகன் சந்திக்கும் புரட்டாசித் திருநாளுக்கும் நுந்தா விளக்குக்கும் திருநாமத்துக்காணியாக இறையிலி நிலம் அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது.

இந்தச் சாசனம் தென்னிந்திய சாசனங்கள், VIII வால்யூம், 350 நெ ஆகவும், எபிகிராபியா இந்திகா, XXIV வால்யூம், 22-28 பக்கங்களிலும் பதிப்பிக்கப் பெற்றுள்ளது.

சாசனம் — **57**] [*D. 3656*

கோபுர வாசலுக்குத் தென் பாரிசம் மகாமண்டபத்துத் திரணையில் பொறிக்கப்பட்டிருப்பது.

(No. 74 of 1903) On the west wall of the maṇḍapa in front of the central shrine in the Āpatsahayēśvara temple. An incomplete record of the Vijayanagara king **Krishnadevaraya** dated in S'aka, 1439, Īs'vara, Māgha, Paurṇamī, (corresponding to A. D. 1518, January 26, Tuesday). Seems to register the grant of scme villages as *tirunāmattukkāṇi* to the god Āvattukkattaruḷiya Nayanar of S'ēndamaṅgalam in Naḍuvil maṇḍalam.[1]

ஸ்ரீ மஹாகணபதயெ நம[: ||*]

நமஸ்துங்க ஶிரஶ்சும்[பி](ச)[ந்த்ர] சாமர சாரவே [|*]

---

1 தென்னிந்திய சாசனங்கள், VIII வால்யூம், 352 நெ. ஆக வெளியாகியுள்ளது. தானம் வழங்கிய ஊர்ப்பெயர்கள் இங்கே பூர்த்தியாக உள்ளன.

த்ரைலோக்ய நகரா[ரம்ப
மூ]லஸ்தம்பாய ஸம்பவே [||*] உ[1]

ஸ்வஸ்திஸ்ரீ [||*] விஜயாப்யுதய ஸாலிவாகந ஸக வருஷம் ௲௪௱௩௰௯க்கு மேல் செல்லாநின்ற ஈஸ்வர ஸம்வத்ஸரத்து மாக ஸுத்த வெள்ளியின்மேல் ஸ்ரீமது ராஜாதிராஜ பரமேஸ்வர அரிய ராயவிபா[ட பா*]ஷைக்குத் தப்புவராயர கண்ட அஷ்டதிக்கு ராய மநோபயங்கர மூவராய[ர*]கண்ட யவநராஜ்ய ஸ்தாபநாசார்ய ப்ரதாபருத்ர கஜபதி ஸப்தாங்கஹரண ஸ்ரீவீர க்ருஷ்ணதேவமஹாராயர் சோ[ழ*]மண்டல ஸிவஸ்தான விஷ்ணு[*]ஸ்தாநங்களுடைய ஜோடி[களும்] அர[ஸு] பேறுகளும் ஸர்வமாந்யமாக விட்டு பாலித்து அருளிந யஸோபாஸந ராயஸம் [||*] ஸும் விஜய நகர வட்டணத்திலும் ஸம்வத்ஸிக்கு யாத்ரையாக சித்தே(ச)[சி] உதயகிரி துர்க்கமும் ஸாமந்தராஜ குருமலெ[2] ராஹுத்தராயனையும் பிடித்துக்கொண்டு வி(நு)[னி]கொண்டை நாகார்ஜுன கொண்டை, கொண்டவிடு, கொண்டப[ல்*]லி ராஜ மஹேந்த்ர வரம் முதலான துர்க்கங்களும் ஸாதித்து வாங்கிகொண்டு ப்ரதாப(ா)ருத்ர கஜபதி குமார(ா) வீரபத்ர கஜபதி ப்ரதாந மஹாபாத்ர ப்ரதானராஜ ஸிரஸ்ஸுரு ம[ல்*]லி[க]வாந் உத்(த)ண்டவாந் முதலாந (வற்)[வா]த்ரு ஸா[ம*]ந்தரையும் ஜீவ(ா)க்ரா[ஹ*]மாக ஹ(ம)[டி] கொண்டு ப்ரதாப ருத்ர கஜபதியையும் முறியக்குத்தி ஸிம்ஹாத்ரியிலெ இருந்து பொட்டு னூரிலெ ஜயஸ்த(ம்)[ப]ஹமும் பொடுவித்து சோழமண்டல நடுவில் மண்டல செந்தவன்மங்கலம் உடையார் ஆ(லங்)[வத்]துக் காத்தருளிய நாயினுற் திருனுமத்துக் கா[ணி] கீழை மாகனூர் மெலைமாகனூர் நன்னுறம் மிசுரகண்டநல்லூர் கம்பன் மற்றும் உள்(ப்)பட்ட தெய்வஸ்தானங்கள் இறைவான் அரசூர் உள்பட சிவஸ்தானம் வி[ஷ்ணு] ஸ்தானங்களிலெ ஸம்வத்ஸர முதலாக அரைமணைக்கு இறுத்து வருகிற ஜோடி பொன் பதினாயிரமும்

---

1 இந்தச் சுலோகத்தின் மொழிபெயர்ப்பு வருமாறு:
"கங்கையையும் சந்திரனையும் தலையிலே தரித்திருப்பவரும் மூவுலகங்களிலும் உள்ள நகரம் கிராமம் முதலியவற்றின் சிருஷ்டிக்கு ஆதாரமான தூணாக (மூலஸ்தம்பமாக) இருப்பவருமான ஈசுவரனை வணங்குகிறேன்."

2 'ஸாயித்து திருமலெ' என்று வாசிக்க.

அந்தந்த தெவஸ்தானங்களுக்கு உத்தான ஸங்க்ரா[ந்*]தி புண்யகாலத்திலும் க்ருஷ்ணவெணி தீரத்திலும் உண்டவல்லி அநந்தஶாயி சன்னதியிலும் பெஜவாடை மல்லிகார்ஜுந தெவஸந்நதியிலும் ஸஹிரண்யோ(த)தக தாராபூர்வகமாக ஸர்வமான்யமாகவிட்ட தத்த (ஸ)[ஶ]ாஸ[ந*]ராயஸம்[|*] இந்த ராயஸ(ம்) ப்ரமாணத்துக்கு மெஸ்ஸாததுக்கு தெர்க்கு ஸமுஷ்த்துக்கு[1] மெ[ற்*]க்கு தென்வெ[ள்*]ளாத்துக்கு கொட்டை கரை மதுளுக்கு கிழக்கு நடு (வ)[வில்] ஶிவஸ்தான[2] (ஶ்ரீரா ஸாஸநம் உ)

சாசனம் — **58**] [D. 3664

கோபுர வாசலுக்கு வடபாரிசம் மகாமண்டபத்துத் திரணையில் பொறிக்கப்பட்டுள்ளது.

சக வருஷம் *1352*, ஸவுமியவஷ துலாமீ அபரபக்ஷம் ஏகாதசி திங்கட்கிழமை உத்திரம் பெற்ற நாளில் ஸ்ரீ வீரப்பிரதாப தேவ ராயர் ஆட்சியில் நடுவில் மணடலத்து இராஜராஜ வளநாட்டுத் திருமுனைப்பாடி நாட்டுச் சேந்தமங்கலம் உடையார் ஆவத்துக் காத்தருளிய நாயனருக்கும் தெற்கு வாசலில் உள்ள கிராம தேவதையான துர்க்காதேவிக்கும் தேவராய மஹாராயர் ஸர்வ வாதை பரிஹாரமாகப் பூஜைக்கும் அமுதுபடிக்கும் நுந்தாவிளக்குக்கும் பங்குனி மாசத்திலே சதய நக்ஷத்திரத் திருத்தேர் திருநாளுக்கும் வழுதிலம்பட்டு உசாவடியில் கல்லைக்குறிச்சிப்பற்றில் கல்லைக்குறிச்சி, செங்கொண்டான் பற்றில் ஆற்றூர் ஆகிய இரண்டு கிராமங்களையும் ஸர்வமானியமாக அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது.

தென்னிந்திய சாசனங்கள், VIII வால்யூம், 349 நெ. ஆக வெளியாகியுள்ளது.

சாசனம் — **59**] [D. 3675

உள் கோபுர வாசலுக்கு உள்வாயில் தென்புறம் உள்ளது.

சுந்தரபாண்டிய தேவனுடைய ஆட்சியின் 17-ஆம் ஆண்டு *186*-ஆம் நாள் கொடுக்கப்பட்ட சாசனம். பதினேழாம் ஆண்டின்

---

1 'மெடிலவாற்றுக்கு தெற்கு ஸமுத்ரத்துக்கு' என்று திருத்தி வாசிக்க.

2 கல்வெட்டு இதற்கு மேல் இல்லாமல் குறையாக நின்றுவிட்டது.

தை மாதம் முதல் வாணிலை கண்ட வீரசரமுடைய நாயனு ருக்கு அமுதுபடிக்கும் அவ்வரசன் கண்ட 'எல்லாந் தலையான பெருமாள்' திருநாளுக்கும் சந்திக்கும் அவ்வூரைத் திருநாமத்துக் காணி இறையிலியாக அளித்த செய்தியைக் கூறுகிறது.

தென்னிந்திய சாசனங்கள், VIII வால்யூம், நெ. 359 ஆக வெளி யிடப்பட்டுள்ளது.

சாசனம் — **60**] [D. 3676

அதே இடத்தில் உள்ளது.

திரிபுவன சக்கரவர்த்திகள் கோனேரின்மை கொண்டான் பராக்கிரம பாண்டியன் காலத்துக் கல்வெட்டு. வாணிலை கண்டீசுர முடைய நாயனுர்க்கு ஸ்ரீரங்கநாத நாயக்கர் ஏற்படுத்திய 'கண் டர்கண்டன்' சந்திக்கும் திருநாளுக்கும் நுந்தாவிளக்குக்கும் திரு நாமத்துக்காணி முதலடங்கல் இறையிலியாக நடுவில் மண்டலத் துத் திருமுனைப்பாடி நாட்டுத் திருவெண்ணை நல்லூர்ப் பற்றில் முடியூர் தென் பிடாகையில் ஆத்திப்பட்டுக் கிராமத்தை அளித்த செய்தியைத் தெரிவிப்பது. பூர்த்தியாக இல்லை. அரசன் ஆட்சி யின் ஆண்டும் குறிக்கப்பெறவில்லை.

தென்னிந்திய சாசனங்கள், VIII வால்யூம், 355 நெ. ஆகப் பதிப்பிக் கப்பெற்றுள்ளது.

சாசனம் — **61**] [D. 3677

மகாமண்டபத்துக்கு வடபாரிசம் திரணைக்கட்டில் உள்ளது.

திரிபுவன சக்கரவர்த்திகள் கோனேரின்மைகொண்டான் ஸ்ரீ வீரபாண்டிய தேவனுடைய ஐந்தாம் ஆண்டின் ஆடிமாதம் ஐந் தாம் தேதியுள்ள கல்வெட்டு. மிலாடாகிய செனநாத வளநாட்டுக் குறுக்கைக் கூற்றத்து ஆதனூர்ப்பற்றில் நாட்டசேந்தமங்கலத்து உடையார் வாணிலை கண்டீசுரமுடைய நாயனுருக்கு மன்னன் பேரால் கட்டின 'பூமி புத்திரன்' சந்திக்கும் திருநாளுக்குமாக அந் நாட்டில் கெடிலத்துக்குத் தெற்கில் துலாம்பூண்டியை இறையிலியாக விட்ட செய்தியைக் குறிப்பதாகத் தோற்றுகிறது. பூர்த்தியாக இல்லை.

தென்னிந்திய சாசனங்கள், VIII வால்யூம், 353 நெ. ஆக வெளி யாயிருக்கிறது.

சாசனம் — **62**] [D. 3678

உள் கோபுரம் வாசலுக்கு உள்வாயில் தென்புறம்.

(No. 79 of 1903). On the *gopura,* left of entrance. Registers the tax-free gift of the villages Ālappākkam and Veḷiyambākkam as *tirunāmattukkāṇi* to the god Vāṇilaikaṇḍa vīrēs'varam-uḍaiya-Nāyanār and fixing the income as 54 *pon* and 7 *mā* for conducting the festival called 'Ellāntalaiyāna Perumāḷ' and sandi and for food offerings, from the month of Kārttigai of the 17th year. The order was signed by Neṭṭūr-uḍaiyān.

This record evidently belongs to the reign of the Pāṇḍya king Jaṭāvarman **Sundara Pandya.** (vide - also No. 59 above).

தென்னிந்திய சாசனங்கள், VIII வால்யூம், 357 செ. ஆக வெளி யாகியுள்ளது. எனினும் அங்கே சிதைவால் விடுபட்டுப்போன எழுத்துக்கள் இவ்விடம் காணப்படுவதால் இச் சாசனம் இங்கே பதிப்பிக்கப்பெற்றுள்ளது.

சுவஸ்திஸ்ரீ[||*]................[1] செந்தமங்கலத்து ஒடையார் வாநிலகண்ட விரெசுவறமுடைய ஞயகஞற் கொவில் ஸ்த்தா னத்தாருக்கு; ஒடையார் வாநில கண்ட விரெசுவற முடைய ஞயஞருக்கு யஎ-ஆவது கார்த்திகை மீ௳ முதல் கட்டின எல் லா[ந்*]தலெயான பெருமாள் திருஞளுக்கும் சந்திக்கும் அமுது படிக்கும் நிச்சயித்த ஒடல்கொளுப[2] பணத்துக்கும் நெல்லுக் கு(ம்) முடலாக ஞயஞற் (தரி)[திரு]ஞமத்துக்கு காணியான ஆலப்பாக்கம் வெளியம்பாக்கத்து புறஒடலுக்கும் காரொபாதிக் கும் (கெ) [இக்]கொவில் பூசை மி[கு] (தி)திக்கும் ஒடலாக பதி ஞற தெவதாயம் யிருத்து பொந்த பொன் ஐம[ப*]த்துஞலெ எழும[ா*]வும் சமித்து யிவுக்குள் பூதலடங்க எறையிலி[3] யாக தத தறறமடடி[4] கைகொண்டு அமுதுபடியும் திருஞளும் தாழ்வு படாமல் செய்யவும். யிப்படிக்கு யிவ்வொலே யில.................[5]

---

1. 'இதற்குமேல் 4 எழுத்துப்போக அப்பால்' என்று மூலப்பிரதியில் காணப்படுகிறது. அவ்விடத்திலே 'அருளிச்செயல்' என்று இருக்கவேண்டும்.
2. 'உடற் கொள்படி பணத்துக்கும்' என்று வாசிக்க.
3. 'கழித்து இவ்வூர் மூதலடங்கல் இறையிலி' எனத்திருத்தி வாசிக்க
4. 'தந்தோம். இந்தப்படி' என்று திருத்திக்கொள்க.
5. 'இதில் பத்து எழுத்துப்போக அப்பால்' என்று மூலப்பிரதியில் காணப்படுகின்றது. 'இவ்வொலே பிடிபாடாகக்கொண்டு' என்று இருக்க வேண்டும்.

ஆண்டு சந்திராதித்திய வறைக்கும் செல்வதாக க(ர)ல்லிலும் செம்புலிம் வெட்டி கொள்ளவும். யிவை நெடடடு ஆரெழுத்து. பொக நெட டொ[டையான்] கை எழுத்து.[1]

சாசனம் — 63] [D. 3680

அதே இடத்தில் உள்ளது.

உடையார் வாணிலைகண்ட விரீச்வரமுடைய நாயனுருக்கு 'எல்லாந்தலையான பெருமாள்' திருநாளைக்கும் 'ஐய்யனங்கக் காறன்' சந்திக்கும் திருப்பணிக்கும் ஐந்து நுந்தா விளக்குக்கும் உடலாக இறையானறையூர்ப் பற்றில் மாண்டிபுரப் பற்றில் கோட்டையூர் என்னும் ஊரைப் பதினேழாம் ஆணடின் தைமாசம் முதல் இறையிலியாக அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது. நெட்டூருடையான் கையெழுத்துக் கொண்ட இக்கல்வெட்டும் பாண்டிய மன்னனுன ஜடாவர்மன் சுந்தர பாண்டிய தேவனுடையதாகவே இருத்தல்வேண்டும்.

தென்னிந்திய சாசனங்கள், VIII வால்யூம், 358 நெ. ஆக வெளியாகியுள்ளது. அவ்விடத்திலே தானம் அளிக்கப்பட்ட ஊரின் பெயர் 'கொ[ம்]ல[ப]ூர்' என்று காணப்படுகிறது.

## திருக்கோவலூர் Tirukkōvalūr

மக்கென்ஸியின் காலத்திலே இவ்வூர் ஒரு துக்கடியின் தலைமை ஸ்தானமாக இருந்திருக்கிறது. இவ்வூரிலே உள்ள திரிவிக்கிரமப் பெருமாள் ஆலயம் வைஷ்ணவர்களுக்கு ஒரு திவ்விய தேசம். கல்வெட்டுக்களில் பெருமாளின் பெயர் திருவிடைகழி எம்பெருமான் என்று காணப்படுகிறது. முதலாழ்வார் மூவரும் சந்தித்து எம்பெருமான் தரிசனத்தைப் பெற்ற பெருமை வாய்ந்த ஸ்தலம் இது.

சாசனம் - 64] [D. 2767

திரிவிக்கிரமப் பெருமாள் கோவில் இரண்டாம் பிராகாரம் தென்புறம் மதில் வச்சிரப் படையில் உள்ள முதல் சாசனம்.

(No. 340 of 1921). On the south wall of the second prākara of the Trivikramap-perumāḷ temple. Dated in the 10th year, Simha,

---

1. 'இவை நெட்டூருடையானெழுத்து' என்று வாசிக்க.

**S'u.** prathamā, Monday, Pūram of the reign of the Chōḷa king Tribhuvana-chakravartin **Rajadhirajadeva** it records that in response to the request of Rajarāja Chēdiyarayan, the king made, through Pallavarāyan, a tax-free gift of 21¼ *veli* of dry land in Tirukkōvalūr and Kiranūr villages to supplement the previous donation made, for offerings and daily worship to the god Tiruviḍaikaḻi-Āḻvār.

The king is evidently Rajādhirāja II and the equivalent English date of the inscription would be A.D. 1172, August 21.

ஸ்வஸ்திஸ்ரீ[॥*] த்ரிபுவந சக்ரவத்திகள் ஸ்ரீராஜ[ா*]திராஜ தேவர்க்கு[1] யாண்டு ய ஆவது ஸிம்ஹ நாயத்து பூர்வ பக்ஷத்து பிற தமையும் திங்கட்கிழமையும் பெற்ற பூரத்து நாள் மலாடான ஜனநாத வளநாட்டுக் குறுக்கைக் கூற்றத்து திருக்கொவலூரான ஸ்ரீமதுராந்தகச் சதுர்வேதி மங்கலத்து திருவிடைகழி ஆழ்வாற்க்கு இவ்வூர் மெல்கழணியில் முன்பு பழந்திருவிடையாட்டமாய் வருகிற நிலத்துக்கு மெல் ஏற்றந் திருவிடையாட்டமாக வரியிலிட்டு ப்ரஸாதஞ் செய்தருளிவந்த திருமுகப்படி: த்ரிபுவந சக்கிரவர்த்தி கொநெரின்மை கொண்டான் செனநாத வளநாட்டுக் குறுக்கை கூற்றத்துத் திருக்கொவலூரான மதுராந்தக(ம்) சதுப்பெதி மங்கலத்து திருவிடைகழி நின்றருளின ஆழ்வார் கொயிலில் ஸ்ரீவைஷ்ணவ கண்காணி செய்வார்களுக்கு: இவ்வாழ்வாருக்கு வெண்டும் நிமந்தங்களுக்கு முன்பு இறையிலி உள்ள நிலத்துக்கு மெல் ஏற்றமாக இவ்வாழ்வார் தெவதானமான நிலத்துக்கு செர்வாகத் திருக்கொவலூரான மதுராந்தகச் சருப்பெதி மங்கலத்து நத்தத்துக்கு மெற்கு எரிக்[கு*] நீர் பாய்கற நாக தலை வாய்க்கு வடக்கும் கீழை நாரைக்கல் பாறைக்கு கடையான இரவிகுல மாணிக்கச் சருப்பெதி மங்கலத் தெல்லைக்கு கிழக்கும் பெண்ணை யாற்றுக்கு மிவ்வாழ்வார் நந்தவானம் ஜயங்கொண்ட சொழனுக்கும் திருவிரட்டான

---

1. இந்தச் சாசனத்துக்கும் ஓலைப்பிரதி, காகிதப்பிரதி ஆக இரண்டு உள்ளன. இரண்டுக்கும் வேறுபாடு அதிகம் காணப்படுகிறது. ஓலைப்பிரதியின் பாடமே இவ்விடம் கொடுக்கப்பட்டிருப்பது. காகிதப்பிரதியிலும் அதன் அடியாகப் பிறந்த வேறு பிரதிகளிலும் அரசன் பெயர் ராஜராஜ தேவர் என்றே காணப்படுகிறது. ஆயினும் அது தவறு என்பது, சாசன இலாகாவிலும் அரசன் பெயரை ராஜாதிராஜ தேவன் என்றே வாசித்திருப்பதிலிருந்து விளங்கும்.

முடையார் தெவதானம் மெல்வளையிலுக்கும் தெற்க்கும் இன்னான்கெல்லைக் குட்பட்ட விளை நிலத்தில் இவ்வூர் திருமெற்கொயிலாழ்வார் தெவதான நிலமாட்டு மாமுக்காணயும்[1] இவ்வாழ்வார் பழந்தெவதானமாய் வருகுற நிலமும் நீக்கி இத்தொடெசெரக் கிழக்கும் மெற்க்கும் திறப்பாய் கிடந்த நிலம் பதினொன்றேகாலும் ஆற்றங்கரையில் கிழக்குக் கா[ல்]கொள் கொட்டகல்லுக்கு மேற்கு கீரனூர் சறுதியாக ரு. ா[2] புன்செய் நிலத்திலிவ் வாழ்வார் பழநந்தவானங்களும் திரு வீரட்டான முடையார் தெவதானம் பொன்னம்பலக் கூத்தனும் நீக்கி உள்ள புன்செயும் கிரனூரும் நான்கெல்லைக்குட்பட்ட விளைநிலத்தி லுள்ளூற் தெவதானங்கள் நீக்கி நின்ற நின்ற நிலம் பத்து வெலியும் ஆக நிலம் இருபத் தொன்றெகாலும் புஞ்சையும் இ[வ்*] வாழ்வாருக்கு இறையிலி தெவதானமாக இடப்பெற வெணுமென்று ராஜராஜ செதியராயன் சொல்லி வர காட்(ட)[டி]னாகை பல்லவராயன் நமக்கு சொன்னவாறெ இந்நிலம் இருபத்தொன்றெ காலும் புஞ்சையும் பத்தாவது முதல் இவ்வாழ்வாருக்குத் தெவதான இறையிலியாக இடக்கடவதாக வ(ர)ரியிலாரும் வரிக்கூறு செய்வார்களும் எழுத்தி[ட்டு*] உள்வரி பொதக்க காட்ட சொன்னொம். இ[ன்*]னிலம் பத்தாவது முதல் இவ் வாழ்வார்க்கு தெவதான இறையிலியாகக் கைக்கொண்டு கல்வெட்டிகொள்க. எழுதினா[ன்*] திருமந்திர ஓலை மீனவன் மூவெந்த வெளான் யாண்டு-ம-னாள் கூமக. இத் திருமுகத்திலு முள்வரியிலும் எழுத்திட்டார் களப்பாள ராயன் நீல கங்கரயன் மழவராயன் நுளம்பராயன் நந்தி பத்தாயன் வில்வராயன் மழவதாயன் வாஞயி ராஜன் கனகராயன். புரவரி ஸ்ரீகரண நாயகம் குன்ற கிழான். புரவரி ஸ்ரீகரண நாயகம் நாணலூருடையான். புரவரி ஸ்ரீகரண நாயகம் சிறுகுடையான். புரவரி ஸ்ரீகரண நாயகம் ஆளுடையான். புரவரி ஸ்ரீகரணத்து [முகவெட்டி] வெளூர் கிழவன். புரவரி ஸ்ரீகரணத்து முகவெட்டி எருமலூராயன். புரவரி ஸ்ரீகரணத்து முகவெட்டி சிறுதலூருடையான். புரவரி ஸ்ரீகரணத்து முகவெட்டி கங்கை உடையார். பழ நதிய ராயன். நந்தியராயன். அமரகொன் முவெந்தரயன். விஜயராயன். சிங்களாயன். ஜினத்தரயன். முடிவு. ஸ்ரீ ||

---

1. ‘நிலம் எட்டுமா முக்காணியும்’ என்று இருத்தல் வேண்டும்.
2. ‘நிலம் நூறு’ என்பதன் குறியாகத் தோற்றுகிறது.

சாசனம் - **65**] [D. 2871—2

*இரண்டாம் பிராகாரம் வடபுறம் மேலண்டை மூலக் கோணத்தில் வச்சிரப் படையில் பொறிக்கப்பட்டிருப்பது.*

'ஸமஸ்தபுவநைகவீர' (ஸமஸ்த புவனைகவீர) என்று தொடங்கும் வடமொழிப் பிரசஸ்தியுடன் கூடிய விக்கிரம பாண்டிய தேவன் கல்வெட்டு. அவனுடைய ஆட்சியின் எட்டாம் ஆண்டு தனுர் மாசம் அபர பக்ஷம் அஷ்டமி வெள்ளிக்கிழமை அஸ்த நக்ஷத்திரம் ஆகியவை கொண்ட நாளில் ராசராச வளநாட்டுத் திருமுனைப்பாடிக் கீழாமூர் நாட்டுக் கொட்டிளம் பாக்கத்துக் குண நல்லூழான் அரையன் திருவலஞ்சுழி உடையான் அழகப் பெருமானான காடுவெட்டி என்பவன் மலாடாகிய ஜனநாத வளநாட்டுக் குறுக்கைக் கூற்றத்துத் திருக்கோவலூர் நாயனார் திருவிடைகழி நாயனார் திருமுக மண்டலம் தோன்றப் பெருமாள் (அரசன்) திருமேனி நன்றாக வைத்த விக்கிரம பாண்டியன் துடர் திருநந்தா விளக்கு இரண்டுக்கு இறையிலியாக இரண்டாயிரத்து அறுபத்தெட்டுக் குழி நிலம் அளித்த செய்தியைக் கூறுகிறது.

தென்னிந்திய சாசனங்கள், VII வால்யூம், 128 நெ. ஆக வெளியிடப்பட்டுள்ளது. அதிலே சாசனம் முதற் பிராகாரம் வடபுறச் சுவரில் பொறிக்கப்பட்டிருப்பதாகக் காணப்படுகிறது.

சாசனம் — **66**] [D. 2871—3

*இரண்டாம் பிராகாரம் வடபுறம் மேலண்டை மூலக் கோணத்தில் மேல் புறம் வச்சிரப் படையில் பொறிக்கப்பட்டுள்ளது.*

(No. 330 of 1921). On the northern wall of the second prākāra of the temple. Dated in S'aka 1427, Krōdhana, Kumbha, S'u. das'ami, Thursday, Punarpūs'am, (corresponding to A. D. 1506, February 5) in the reign of the Vijayanagara king **Immadi Narasa Nayaka,** son of Narasimha Mahāraya, the inscription registers that certain lands in the three banks (divisions), out of 12 banks in the village (Tirukkōvalūr), were sold at a loss to the temple of Tiruviḍaikaḷi Nayanar by the tenants owing to their inability to pay the taxes and that when Immaḍi Narasa Nāyaka visited the temple on a dvadas'i day, he made these lands tax-free and ordered the profits thereon to be utilised for offerings and worship to the god on certain

days every month. Immadi Narasayya-dēva and Vīramaras'ayya Pallavaraiyan are mentioned as the king's secretaries to whom the above oral orders were given.

ஸ்வஸ்தி[||*] ஸ்வஸ்தி[||*] ஸ்ரீமது மஹாமண்டலேஸ்வரன் மெதினீஸ்வர கண்ட கட்டாரி ஸாளுவ தெவ நரஸிம்ஹ மஹாராய இம்மடி நரஸா நாயக்கர் ப்ருதிவீராஜ்யம் பண்ணி யருளா நின்ற ஸகாப்தம் ருசஎஉயஎ-ன் மெல் செல்லா நின்ற ப்ரஜோத்பத்தி ஸம்வத்ஸர கும்பநாயற்று பூர்வ பக்ஷத்து ப்ரதமையும் ப்ருஹஸ்பதி வார மும் பெற்ற புணர்பூசத்து நாள் மலாடாகிய ஜநநாத வளநாட்டு கொறுக்கை கூற்றத்து திருமுனைப்பாடி நாட்டுத் திருக்கொவ லூர்ப் பற்று பெண்ணை தென்கரை ஸ்ரீமதுராந்தக சதுர்வெதி மங்க லத்து திருக்கொவலூர் நாயனூர் திருவிடைகழி நாயனூர்க்கு முன் னுள் இவ்வூர் உள்கிடை திறப்புக் கரை பன்னிரண்டில் ஊரவர் பாதி கரை[யா*]மாறில் முதற்கரை யரையு மிரண்டாங்கரை யரையும் நாலாங்கரை.யரையும் அஞ்சாங்கரை ஒன்றும் ஆறுங் கரை யரையும் ஆகக் கரை மூன்றும் ஊ[ர*]வர் எங்களுக்கு இறுக்கக் கடைப்பாடாகென்று நஷ்மெ விலையாக நாயனூர் திரு விடைகழி நாயனூர் திருக்கையிலெ திருநா(ய)[ம]த்து காணியாகத் தார [ர*] பூறுவமாக பண்ணிக் குடுத்து யிந்த கரை மூன்றுக்கு முண்டான மனை மனைப் படப்பு(ப்) பறை பறத்திடர் மெல் நொக்கின மரம் கீழ்நொக்கின கிணறு நஞ்சைய் புன்செயும் நாற் பாற்கெல்லை யெரிமீன் ஒழுக்கு நீர் பாட்டம் வாசல்வரி வால்வரி செக்கத் தொட்டு தறிகடமை நற்றவரி ஆசு(வ)பதி மக்கள் பெறக் கடமை மற்றும் எப்பெர்பட்ட சகல ஸமுதாய ப்ராப்திகளும் திரு நாமத்துக் காணியாக நடந்துவருகையில் நாளது இம்மடி நரஸா நாயக்கர் திருக்கொவலூருக்கு எழுந்தருளி நாயனூர் திருவிடைகழி நாயனூரை ஸெவித்து அர்த்தப்ரதி புண்ய காலத்திலெ யிந்த திரு நாமத்துக் காணியாக நடந்துவருகுற கரை மூன்றும் இதுக்கு வரும் சகல ஸமுதாய ப்ராப்திகளும் திருவிளையாட்டமாக ஸர்வமா ந்ய யிறையிலியாகத் திருவாராதநத்துக்கும் திங்கள் திவஸம் திரு னுளுக்கும் திருவிளையாட்டமாக விட்டொம் என்று இம்மடி நரஸையத் தெவற்க்கும் வீரமரசையப் பல்லவராயற்க்கும் ஸமுத்ர அப்புணையாக சந்திராதித்தவரையும் ஸர்வமாந்யமாக நடக்கும் படிக்குக் கல்லிலும் செம்பிலும் வெட்டிக் குடுங்கொளென்று ஸ்வாமி திருஉள்ளம்பற்றி யருளின அப்புணைப்படிக்கு ஸ்வாமிக்கு திக்கு விஜைய முண்டாகவெணுமென்று இம்மடி நரசையத் தெவரும் வீரமரசையப் பல்லவராயரும் கல் வெட்டி வித்த

படியாலெ இந்த கல்வெட்டுப்படி யிந்த திருவிளையாட்டம் ஸவ-மா-நயமாக சந்-ராதித்தவரையும் நடக்கக் கடவதாகவும். ஸ்ரீ வைஷ்ணவரக்ஷை. இந்த யஜ்ஞ-த-க்கு ஆஹிதம் பண்ணினவென் கெங்கைக் கரையில் காராம் பசுவை கொன்ற பாவத்திலும் தன் மாதா பிதாவையும் குருவையும் தன் கையாலெ கொன்ற பாபத்திலெ பொகக் கடவனாகவும். இந்த ஸவ-மா-நயத்துக்கு யாதொருத்தன் அஹிதம் பண்ணினவன் தன்னிட மணாட்டியை திருக்கொவலூர் நத்த வெட்டியானுக்கு குடுக்கக் கடவனாகவும்.

சாசனம்-67 ] [D. 2871—4

இரண்டாம் பிராகாரம் வடபுறம் வச்சிரப்படையில் உள்ளது.

மிலாடாகிய ஜநநாத வளநாட்டுத் திருக்கோவலூர் எழுபத்தொன்பது நாட்டுப் பதினெண் பூமிச் சித்திரமேழி விண்ணகரான் திருவிடைகழி நின்றருளின பெருமாளுக்குச் சித்திரமேழிப் பெரிய நாட்டவர் வருஷந்தோறும் ஏர் ஒன்றுக்குப் பதக்கு நெல்லும் ஆள் ஒன்றுக்குக் குறுணி நெல்லுமாக அளிக்க ஒப்புக்கொண்டு வைத்துக் கொடுத்த பரிசைத் தெரிவிப்பதாக உள்ள இக் கல்வெட்டு பூர்த்தியாக இல்லை. பூமி புத்திரர்கள் ஆன உழவர்களுடைய பெருமையை எடுத்துக் கூறும் அழகிய செய்யுட் பகுதியுடன் ஆரம்பிக்கிறது இக் கல்வெட்டு.[1]

தென்னிந்திய சாசனங்கள், VII வால்யூம், 129 நெ. ஆக வெளியாகியுள்ளது.

---

1. அந்தத் தமிழ் செய்யுட் பகுதி பின் வருமாறு:

பூமிதேவிக்கு மக்களாகி நிகழ்
செந்தமிழ் வடகலை தெரிந் துணர்ந்து
நீதி கேட்டு நிபுண ராகி
நறுமலர் வாடாத் திருமகள் புதல்வர்
எத்திசைக்கும் விளக்காகி இன்சொல்லா லினிதளித்து
வன்சொல்லால் மறங்கடிந்து சதுசாகர பரிமண்டலத்து
சந்திரா தித்த வரையினி தோங்கி
வாதராசன் காற்றசைப்ப வருணராசன் நீர்தெளிப்ப
தேவ ராசன் திசை விளக்க
எத்திசை மகளிரு மினிதுவீற் றிருப்பத்
தெங்கும் பலாவும் தேமாஞ் சோலையும்

சாசனம் - 68] [D. 2871—5

இரண்டாம் பிராகாரத்தில் வடவண்டை வச்சிரப் படையில் உயர ஜல தாரையின் கீழ் உள்ளது.

(No. 312 of 1921). On the north wall of the second prakara of the temple. Dated in Śaka 1414, Paridapi, Tula, Śu. dvādas'i, Saturday, Aśvati, in the reign of the Vijayanagara king Vīrapratāpa **Sadasiva Maharaya,** it records that Sūrappa Nāyaka, son of Pottappa Nāyaka, who bears the title, '*maṇi-nāga puravarādhīśvara*' and who belonged to the Kaśyapa *gotra* made a gift of wet and dry lands for offerings and festivals to the god Āḻvargal-Nayinar at Tirukkōvalūr on the southern bank of the Peṇṇai in Tiruvadi s'īrmai, a sub-division of Tirumunaippāḍi-vaḷanāḍu, which was itself a portion of Vaḻudilampaṭṭu Uśāvaḍi (i.e., chavadi) in Kuṟukkai-kūṟṟam, a district of Malāḍu *alias* Jananātha vaḷanāḍu. It is also recorded that a number of villages and lands which already belonged to the temple and had been assessed were lying uncultivated and that they were now made tax-free by Emberumānār Jīyar. Services named after Aḷiya-rāma rāyar, S'ūrappa Nāyakar and Krishṇama Nāyakar are also referred to. Tirukkōvalūr is called the sacred place of the first three Āḻvārs. (Mudalaḻvār).

The Epigraphy department has read the year as 1474 and the *nakshatra* as Rēvati which would give A. D. 1552, October 29, as the equivalent English date when Sadās'iva rāya was on the throne.

---

வாழையுங் கமுகும் வளர்கொடி முல்லையும்
பூவையுங் கிள்ளையும் பொலிவொடுங் கெழுமி
வாட்ட மின்றிக் கூட்டம் பெருகி
அறம் வளரக் கலி மெலியப்
புகழ் பெருகப் பகை பணியத்
திசையனைத்தும் செவிடுபடாமல் செங்கோல் முன்னாகவும்
சித்திர மேழியே தெய்வ மாகவும்
செம்பொற் பசும்பையே வலிமை யாகவும்
க்ஷமையினொடுங் கருணையெய்திச் சமயதர்ம மினிதுநடாத்தி
நிகழாநின்ற
உத்தம நீதி யுயர்பெருங் கீர்த்தி
முத்தமிழ் மாலை முழுவது முணர்ந்த
சித்திர மேழிப் பெரிய நாட்டோர்.

ஸ்ரீமதே ராமானுசாய நம:-

ஸ்வஸ்தி [||*] ஸ்ரீமந் மஹாமண்டலெஸ்வரந் அரிராய விபாட பாஷைக்கு தப்புவராய கண்ட கட்டாரி ஸாளுவ ஹரிபரராயவிஹாட ஹாஷைக்கு தப்புவராய கண்டன் மூவராய [கண்டன்] கண்டனுடு கொண்டு கொண்டனுடு கொடாதான் துலுக்கதளவிபாடன் துலுக்க மோகரந் தவித்தாங் எம்மண்டலமும் யீழங் திறைகொண்டருளிய ராஜாதிராஜ ராஜபரமெஸ்வர பூறுவ தெக்ஷிண பச்சிம உத்தர சது சமுத்திராதிபதி மெஜவெட்டை(க்) கண்டறுளிய ஸ்ரீவிரப் பிறதாப சதாசிவ தேவ மகாராயர் ப்ருதிவிராஜ்யம் பண்ணியறுளா நின்ற சகாப்த்தம் ௬௪௭௰௪-ன் மெல் செல்லா நின்ற பரிதாவி ஸம்வத்ஸரத்து துலா நாயிற்று பூறுவ பக்ஷத்து ஏகாதஸியும் மங்கள வாரமும் பெற்ற ஸ்வாதி நக்ஷத்ரத்து நாள் மலாடாகிய செனனாத வளநாட்டு கொறுக்கை கூற்றத்து வழுதலம்பட்டு சா(லை)[வடி] திருமுனைபாடி வளநாட்டு திருவதிச்[சி]ர்மை பெண்ணை தென் கரை நடுவில் திருமுற்றய முதலாழ்வாள் திவ்யதெஸமாந திருக்கொவலூர் நயினார் ஆழ்வார்கள் நயினர்க்கு சிந்து கொவிந்த சதகாதண்ட யவனம் கஜகஜி மணி நாக வாரவ(க)[ர]ாதீஸ்வராந காசிஷாகொகக[1] பொத்தப்ப நாயக்கர் புத்திறர் [சூரப்ப]நயக்கரென் சிலாசாசனம் பண்ணிக் குடுத்தபடி திருக்கொவலூராளுகில நாளது விட்ட [நாயந][ார்*]பாதி ஊரவர் பாதி யிதுக்கு வரும் நன்சை புன்சை சகல சமுதாயமும் திருவிடையாட்டமாகவும் பழயை திருவிடையாட்டமான உளநொ உள்கிடை அரியா இகங்கணங் கொல்லை வெயந்தனூர் கீரனூர் குன்றத்தூர் ஆட்கொண்ட நல்லூர் புத்தூர் கிண்கிணிபாடி தொரணம் திகைப்பிபாகம்மா வெந்தல் யிரைஊர் நபட்டு அரசங்குப்பம் தொண்டைமான் குப்பம் கனகராயங்ஏந்தல் தநயாக கிழாமூர் எந்தல் செவகனுயிருந்தல் பினபிறப்பாட்டு மாணிக்க நயினுரெந்தல் வடுகன்பாறை யருட்ப்பட்டு தாங்கல் சிறுசாத்தநல்லூர் உட்கிடை வீரசொழபுரம் உட்கிடை மறுஊர் உட்கிடை மணம்பூண்டி உட்கிடை கொல்லியூர் உட்கிடை யம்காயவா அகரம் [கிராமங்களிலும்] ய௮ எந்தல் உட்கிடை ௬ சொடி[தட்டி]த்தெல்லாமாக யிவை எம்பெருமானார் ஜீயர் சறுவமானியமாக விடுவித்து கொள்ளுகையில் தாரா பூர்வமாக சறுவம[ா*]னியத் தி[ரு*]விளையாட்டமாக அசந்த்ராகாஸ்தாயியாக செல்லவிட்டென். யிந்தக்

---

1 'காசிப கொத்திரத்து' என வாசிக்க.

கிருமங்கள் உள்ளூருள்பட ரெகை ௫ ௨ தூடுாஎ௰௨. யிந்த பொன் யிரண்டாயிரத்து அஞ்ஞூற்று எழுபத்திரண்டும் பொலியூட்டுக் கட்டிநபடித்தாக கட்டளை நிற்றப்படிக்கு வர சாதனக்கட்டளைக்கு நாளொன்றுக்கு தெத்தியொதனத்துக்கு தளிகை ௪-க்கு [சதரா யர்] அவசறம் முதல் அவசரம் க-க்கு சன ௬ஹ அலிய ராம ராயர் யிரண்டாம் அவசரம் க-க்கு கட்டளை குறுணி சூரப்ப ளுயக்கர் மூன்றும் அவசரம் க-க்கு ஆக ௬ ஹ கிருஷ்ணப்ப ளுயக்கர் ளுலாம் அவசரம் க-க்கு ஆக ௬ ஹ திருவத்திசாமத்துக்கு தளிகை ௨-க்கு ௩ ஆக தளிகை ௬௰க-க்கு ஆக ஏாத திருப்பணியா ரப்படி ஒன்றுக்கு அப்பம் [௬]௰கக்கு சுதியம் ௫௰க-க்கு வடை ௫௰க-க்கு தொசை ௫௰க-க்கு வகை ௪-க்கு ஆக வெஞ்சன வகைக்கு ளுள் க-க்கு ௫ க-ம் ஆக மாதம் க-க்கு ௫ ௩௰ ஆக ........................மாதபடி மாதம் க-க்கு ௫ள—சயள ஆ ௫-க்கு ௩ ௬ தூ ௫ாஎ௰ ளத்து ஷி மாசம் க-க்கு ளுள்-க-க்கு ௫ ௩ாஅ௰௪ ஆ. நிறறப சிலவு ௫ தூ௨ா௨௰௨. [மாதா]ந்திரம் திங்கள் திவச சிலவு ௫ ா திருத்தெர் திருளுள் சிலவு தை மாதம் சூரப்ப ளுயக்கர் உபையத் திருளுளுக்கு ௫ ா மாசம்மாசம் வைப்பளுயக்கர் உபையம் ராவணவெட்டை யாடும் பெருமாள் திருளுள் சிலவுக்கு ௫ ௫௰. பங்குனி மீ கிஷ்ணப்பளுயக்கர் உபையத் திருநாள் சிலவு ௫ ா சித்திரை மீ திவ்வியப்பளுயக்கர் உபையம் வஸநத் திருநாள் சிலவுக்கு ௫ ௩௰ வைகாசி மீ ஆகி ஶ்ஹ திரு வைகாசித் திருநாள் சிலவு ௫ ா. ஸ்ரீ[*ஜ]யந்த திருநாள் சிலவுக்கு ௫ ௰௨ திருப்பவித்ததறறதத றுக்கு ௫ ௬. மஹாநவமித் திருளுளுக்கு ௫ ௰. திருவத்தி அயநத் திருளுள் சிலவுக்கு ௫ ௩௰ ஆ. திருளுள் வகை ௰க்கு சிலவு ௫ சா௫௰அ தொப்புத் திருளுள் சிலவு ௫ ௨௰ ஆ. நிற்றப்படி திங்கள் திவசம் திருளுளுட்பட சிலவு ௫ தூடுாஅ௰ நிறுவாகம் ஷூாநமாந்நிய மிலக்கைத் தரத்துக்கும் ளுள் க-க்கு கட் டளை ஷெஶாஞ்ஹி கொயில் கெழ்வி எம்பெருமாளுர் ஜியர் நிறுவாக மாக ஷு க-க்கு கயிங்கரியத் துறை நாலுக்கு ஷெஶாஞ்ஹி கணக்கு பிள்ளை ஷு கட்டளை நஞ்சை குழி தூடுா-க்கு ௫ ௰டு பு, ௬ ௫ ௪௰௬ ஸ்தானத்தார் நிறுவாகம் ௫-கு திருவாராதனம் பண்ணு கிற ஆழ்வார்கள் பெருக்கு திருமஞ்சனம் ஷ்யம்பாகம் முத லாக பல ஊழியம் பெர் ௰-க்கு தெசக் கணக்குப்பிள்ளைக்கு நஞ் சைக்கி ஆ. த ௫ ௫௰௬ பு. ௪ ௫ டுாச௰௪ ள................. கொயில் கணக்க பிள்ளை கட்டளை குழி தூா ௫ ௪ பு. அ ௫ ௩௰ள. திருக்கை கொள்கை கட்டளை ஸ்ரீ பாதந் தாங்குவார் ௫

ாஉ௰ச-க்கு மெய்காவல் முதலான ஊழியம் பெர் ௩-க்கு எம் பெருமாநடியார் செவுகம்பெர் உ௰ச-க்கு வாஹநத்துக்கு பக்கத் தண்டுட்பட கட்டளை நஞ்சை குழி ௰உ தச ா ௲-௩௰௬ ௲-௩௰௬ ள சில்லறை ஊழியம் பெர் மாநியம் யிலக்கைத்தரமும் மௌகாறர் யிலக்கைத்தரமுட்பட கட்டளை குழி ௬ள ௲ உாசய௰௬ புச ௲ ாந௰உள பொதிகாரம் உட்துறை அதிகாரத்துக்கு கட்டளை ௲ உ௰ச கடைகூட்டிலக்கைக்கு ௰௲பு. ச ஆக. நிவ-ாகங்கள் மாநிய மிலக்கைத் தரமுட்பட கட்டளை குழி உ௰சதுக்கு... நெல்லுமுதலுட்பட குழி [ளபுந ஆ. கூடிந ௲ எயஉ. உாகூ வகை ௲ நளருயக. வபுஉவ௲-கூா௰உ ளருபுகறு ௲களதஹு விலைக்கு ௲ கூ௰. பு௮. ஆக நிலவழி உட்பட ௲ சளகூ௰உ][1] திருப்பணிச் சிலவு ௲ருள. ஆ. ஹு க று படித்தரப் படிக்குச் சிலவு உதுருாஎ௰உ. யிந்தப் பொலியூட்டுப் படிக்கு நிற்றப்படிக்கு நயினர் அமுது செய்தறுளும் தெத்தியொதநம் முதலாந பி[ர] சாதம் பணியாரம் திருவத்திசாம பி[ர*]சாதமும் விட்டவங் விழுக்காடு நாலத்தொன்று யிந்தகொவில் கெழ்வி எம்பெருமானுற் ஜியற்க்கு ஶிஷ்ய பரம்பரையாக ஸக்ஷிதெரு. யிப்படிக்கு ௧ாநாவஔவ-ஃழ பண்ணிச் சிலாஶாஸநம் பண்ணிக் குடுத்தென். யிந்த யஃமஃழ சூஅ ாக-ஃழ ஸ்ராயியாக நடக்க கடவதாகவும். [சுலொகம்]

ஸகெவ ஹஃதிநிரொகெ ஸவெஃஷாஜெஹஔஹுஜாம்
உருஹொமூ நகாமூாஹூ விஷ்ணு ஓயவஸூஸா[2]
ஸ்ரீவெஷ்ணவாகெஷ

சாசனம் - **69**] [D. 2871—6

இரண்டாம் பிராகாரம் கீழ்ப்புறம் வாசலுக்கு வடக்கு அரவத்தின்மேல் பள்ளி கொண்ட வரதர் கோவில் வாசலுக்கு எதிரில் வச்சிரப்படைப் பட்டிகை வரியில் உள்ள சாசனம்.

On the eastern wall of the second prakāra. An incomplete record of the Vijayanagara ruler **Somana Udaiyar,** son of Kampaṇṇa Uḍaiyār, dated in S'aka 1290, Sādhāraṇa, Karkaṭaka, which stops with this date portion.

---

1. இந்தப் பகுதி சரியாக விளங்க வில்லை. மூலப் பிரதியில் கண்ட படியே கொடுக்கப்பட்டுள்ளது.
2. இதன் திருத்தமான பாடத்தையும் மொழிபெயர்ப்பையும் பிற் சேர்க்கையில் காண்க.

ஸ்வஸ்தி [||*] ஸ்ரீமநு மஹாமண்டலேஸ்வரநு அரியராய விபாடன் பாஷைக்கு தப்புவராயர கண்டன் ஸ்ரீ வீர(த)கம்பண உடையார் குமாரன் சோம்மண உடையார் ப்ருதிவிராஜ்யம் பண்ணி அருளா நின்ற சகாப்தம் ருஉரகூ0-ன் மெல்செல்லா நின்ற ஸாதாரண வருஷத்து கற்கடக ஞாயற்று...[1]

திருநறுங்கொண்டை Tirunaruṅkoṇḍai

தென்னாட்டில் உள்ள ஜைன ஸ்தலங்களுள் திருநறுங்கொண்டை முக்கிய மான ஒன்று. சாசனங்களிலே இது ராசராச வளநாட்டுத் திருமுனைப் பாடியில் குன்றத்தூர் நாட்டில் அடங்கியிருந்ததாகக் குறிக்கப்பட்டுள்ளது. அந்த நாளிலே இது ஒரு பள்ளிச் சந்தம், அதாவது சமணப்பள்ளிக்குத் தானமாக விடப்பட்ட கிராமம். மக்கென்ஸியின் காலத்தில் இவ்வூர் விருத்தாசலம் ஜில்லா எலவானாசூர் துக்கடியில் சேர்ந்திருந்தது.

சாசனம்—**70**] [D. 2874—1

திருமாளிகைப் பத்தியில் தென்புறம் பாறையில் மடைப்பள்ளி யண்டையிலே பொறிக்கப்பட்டுள்ளது.

(No. 385 of 1902). On a rock to the south of the shrine in the Appāṇḍanatha temple, otherwise known as Pārśvanātha temple. Dated in the 17th year of the Chōḻa king Rājakēsarivarman **(Rajaraja I)** the inscription beginning with the *meykkīrtti* "Tirumagaḷ pōla", registers the grant of 10 *ma* of land to meet the expenses of burning two perpetual lamps in the shrines Periya-paḻi and Mēlappaḷḷi for the prosperity of **Pirantakan Arumoli** *alias* **Mummadisola Sri Rajarajadeva** by Nārasingan S'rīyaṁkan Iramadēvan *alias* Sēnāpati Mummaḍiśōḻa Brahma mārāyan of Brahmadēyam S'ēraḷāntaka chaturvēdimangalam in Veṇṇāḍu on the southern banks of the river Kāvēri.

ஸ்வஸ்திஸ்ரீ [||*]
திருமகள் போலப் பெருநிலச் செல்வியுந்
தனக்கெ யுரிமை பூண்டமை மனக்கொளக்
காந்தளூர்ச் சாலைக் கலமறுத் தருளி
செங்கை வீரமுங் கங்க பாடியும்
தடிகை பாடியும் நுளம்ப பாடியுங்
குடமலை நாடுங் கொல்லமுங் கலிங்கமும்

1 சாசனம் இதனோடு குறையாக நின்று விடுகிறது.

ஆழ்கடல்சூழ்ந்த அருநெதி யீழமும்[1]
திண்டறல் வெண்றி தண்டாற் கொண்டுதன் ,
னெழில்வள றுழியு ளெல்லா யாண்டு
தொழுதக விளங்கும் யாண்டெ செழியென
தெததகொள்கொவி(ர*)ராஜ[2] ராஜகெசரி பன்மர்க்கு

யாண்டு - யௗ - வது முனைப்பாடி பள்ளிச்சந்தம் திருநறுங் கொண்டை பெரியபாழியில் ஆழ்வாற்க்கும் மெலப்பள்ளி பெரிய ஸ்ரீகொயில் ஆழ்வார்க்கும் பிராந்தகன் அருமோழியான மும்மடி சோழன் ஸ்ரீராஜராஜ தெவருக்கு உத்தரொத்தர ஸஹ்யஷயமாக காவிரித் தென்கரை வெண்ணுட்டில் ஸஹஜெயம் செரளாந்தக ஆதுவெதிஸமருத்து நார[சி*]ங்கன் ஸ்ரீயாமகந் ஊராமதெவனை செனுபதி மும்மடிசொழ ஸஹஜ மாராயன் வைத்த திருநந்தா விளக்கு இரண்டு. இவ் விளக்கிரண்டினுக்குஞ் செய்(த) நில நிவந்தமாவது: இவ்வூர்ப் பெரிய வெரி கீழ்ப்புலம் இந்நிலத்துக் குக் கீழ்பாற் கெல்லை குசவன் செறுவுக்கும் ஊரிக்குண்டிலுக்கு மெற்கு[ந்*] தென்பாற் கெல்லை ஏரிகீழ் வாய்க்காலுக்கு வடக்கு[ம்*] மெல்பாற்கெல்லை பெருந் தூம்பினின்றும் பொந்த பெரு வாய்க்காலுக்கு கிழக்கு[ம்*] வடபாற் கெல்லை கிழக்கு (பி)[ெ]நாக்கிப் பொன கை வாய்க்காலுக்கும் ஆற்றா(ர்)க்குப் பொன வழி வரம்பிற்க்குத் தெற்(க்)கும் இவ்விசைத்த பெரு நான் கெல்லையிலு முண்ணில மொழிவின்றி பதிநறு சாண் கொலால் னூற்றறுவது குழி கொண்ட தொருமாவாக நிலம் ப[தி]த்து மா. இன்னிலம் பத்துமாவு மிரண்டு பள்ளிப் பூ வெற்றி விருளற இறையிலி அனுபவித்துத் திருநந்தா விளக்குச் சந்திராதித்தவல் லெரிப்பதாகவும். இவ்விரண்டு பள்ளிப் பூவெற் றுவிருள பொனுன் இது கொண்டு நின்றுன் எரிப்பதாகவும். இன்னிலத்துக்கு வந்த ஆள் அமஞ்சி ஆற்றுக்கால் செய்யுதீ தாகவும். தலை நீர் கடைநீர் [மி]ச்சப் பெறுவதாகவும். இந் நந்தா விளக்கு இரண்டுஞ் சந்திராதித்தவல். இதன்றெென்றுன் அறத் துக்குப் புறமாவானுகவும். கங்கையிடை குமரியிடை எழு

---

1 'அருநிதி ஈழமும்' என்று வாசிக்க.

2 'திண்டிறல் வென்றித் தண்டாற் கொண்டதன்
னெழில்வள ரூழியு ளெல்லா யாண்டுந்
தெழுதக விளங்கும் யாண்டே செழியரைத்
தேசுகொள் கோராஜ கேசரி வர்ம்மர்க்கு'

நூற்றுக் காதத்தார் செய்த பாவமெல்லாங் கொள்வர். அறமற வற்க்க - அறமல்லது துணையில்லை. [||*][1]

சாசனம் — 71] [D. 2874—2

*ஜினாலயத்திலே சந்திரநாத ஸ்வாமி ஸ்தலத்தின் பின்புறம் திருமாளி கைப் பத்தியின் பட்டிகை வரி வச்சிரப்படையில் உள்ளது.*

(No. 381 of 1902). On the base of the verandah round the Chandranātha shrine in the temple. Dated in fhe 1st year of Tribhuvana chakravartin **Sri Kulottungachola deva,** it registers the grant of the three villages Āṟṟūrp-paḷḷicchandam, *uḷḷūr* (i.e. Tirunaṟuṅkoṇḍai) and Enadimaṅgalam by Aras'a-nārāyaṇan Āḷappiṟandan *alias* Vīras'ēkharak-kaḍavarāyan, as *tirunāmattukkāṇi* to the god (deva) of Nāṟpatteṇṇāyirap-perumpaḷḷi at Tirunaṟuṅkoṇḍai in Tirumunaippāḍi, a subdivision of Rajarāja vaḷanāḍu from that year as granted by His Majesty (aiyyan). [2]

ஸ்வஸ்திஸ்ரீ[||*] த்ரிபுவந சக்ரவ[ர்*]த்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழதேவர்க்கு யாண்டு-க-வது. ராசராச வளநாட்டு திருமுனைப் பாடி திருநறுங்கொண்டை நாற்பத்தெண்ணாயிரம் பெரும்பள் ளித் தெவர்க்குத் திருநாமத்துக்காணியாக ஆற்றூர்பள்ளிசந்த மும் உள்ளூரும் ஏனாதிமங்கலமும் கனனசெமபுன்செய்த்(தி)றை[3] தட்டார்பாட்டமும் மற்றும் எப்பெர்பட்ட ஆயமும் ஆள் அமஞ் சியும் ஆடி கார்த்திகை பச்செ யெச்சொறும் அகப்பட இ[வ்*]

---

1 இது ஏற்கெனவே தேன்னிந்திய சாசனங்கள், VII வால்யூம், 1015 நெ. ஆக வெளியிடப்பட்டுள்ளது. ஆயினும் சாசனத்தின் பிற்பகுதி யும் முற்பகுதியில் ஒவ்வொரு வரியின் ஆரம்பமும் கட்டிடத்திலே மறைந்து கிடந்தமையால் கிடைத்த அளவே வெளியாகியிருக்கிறது. ஆகவே சாசனம் பூர்த்தியாக இங்கே கொடுக்கப்பட்டிருக்கிறது. 'தென்னிந்திய சாசனங்க' ளிலே சேனபதியின் ஊர்ப் பெயர் 'செகளாந்தக சதுர்வேதி மங்கலம்' என்று காணப்படுகிறது.

2 இந்தச் சாசனம் ஏற்கெனவே தேன்னிந்திய சாசனங்கள், VII வால்யூம், 1011 நெ. ஆக வெளியிடப்பட்டுள்ளது. அவ்விடத்தில் அரச னுடைய ஆண்டு [9]என்று காணப்படுகின்றது. தவிர, சாசனத்தின் கடைசிப் பகுதியில் உள்ள செய்யுளும் இல்லை.

3 'நன்செய் புன்செய் தறியிறை' என்று வாசிக்க.

வாண்டு முதல் ஐய்யன் விட்டபடியெ அசந்ராதித்யவரை செல்வன வாக விட்டென் அரச நாராயணன் ஆளப் பிறந்தானான வீர செகர(ர்க்கா)க் காடவராயனென். [॥*]

ஸ்வஸ்தி ஸ்ரீ [॥*] வீரன் திருவறம் பெணுமெய் வீர சங்கத் தவரெ செருங் கனகச் சினகரய புபர்க்குத் தெய்வ மணங் கூருந் தெரிவற் குலொத்துங்க சொழன் கொடுக்க நல்லூர் சாரும் பழ னஞ் சிறு சாந்தை கத்த மடபதியெ.[1]

சாசனம் — **72**] [D. 2873—3

*மேலேயுள்ள சாசனத்துக்கு வடபுறம் பட்டிகை வரியில் எழுதப்பட் டிருப்பது.*

திரிபுவன சக்கரவர்த்திகள் கோநேர் இன்மை கொண்டான் காலத்துக் கல்வெட்டு. திருநறுங் கொண்டைப் பள்ளிக்கு வேண் டும் நிவந்தங்களுக்கும் அமண் பிடாரிகளுக்கும் இறுப்பதாகக் கூடலிலாடற்பாடி வானவன் மாதேவி புரத்தோடுங் கூடின படியே வேறு இருக்கும் சிறுசாத்த நல்லூரில் பத்து வேலி நிலம் மூன்றும் ஆண்டு முதல் பள்ளிச்சந்த இறையிலியாக அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது.

தென்னிந்திய சாசனங்கள், VII வால்யூம், 1012 நெ. ஆக வெளி யாகியுள்ளது.

சாசனம் — **73**] [D. 2874—4.

*முதல் பிராகாரத்தில் தென்புறம் மேல்பாறையில் தென் கிழக்கில் உள்ள சிலாசாசனம்.*

---

1 *இந்தச் செய்யுள் பின்வருமாறு அமையும். இது அடுத்து வரும் 72-ஆம் சாசனத்தைச் சேர்ந்ததாகவும் கொள்ளலாம்.*

வீரந் திருவறம் பேணுமெய்
வீரசங் கத்தவரே
சேருங் கனகச் சினகர
பூபர்க்குத் தெய்வமணம்
கூருந் தெரியற் குலோத்துங்க
சோழன் கொடுக்கநல்லூர்
சாரும் பழனச் சிறுசாந்தை
காத்த மடபதியே.

On the south-east face of the upper rock on the southern side of the first prakāra in the same temple. A record dated in the 10th year of the reign of the Chōḻa king Parakēsarivarman *alias* Tribhuvana chakravartin **Vikramachola deva** beginning with the *meykkīrtti* 'pūmadu puṇara' etc., registering the tax-free gift of wet land reclaimed after a breach in the tank of the village for the expenses of the Vaikās'i festival to the gods Aruṇmoḻi-dēva and Nityakalyāṇa-dēva by Malaiyan Mallan *alias* Vikrama chōḻa Malaiyamān.

ஸ்வஸ்திஸ்ரீ [||*]

பூமாது புணரப் புவிமாது வளர
நாமாது விளங்க ஜயமாது விரும்ப[த்*]
தன்னிரு ப(து)[த]மலர் மன்னவர் சூட
மன்னிய வுரிமையால் மணிமுடி சூடி[ச்*]
செங்கோல் சென்று திசைதோறும் வளர்ப்ப
வெங்கலி நிழற்ற[1] மெய்யற(த்)[ந்] தழைப்ப
கலிங்க [மி]ரியக் கடல்மலை நட[ா*]த்தி
வலங் கொளாழி வரையூழி நடாத்தி[2]
இருசுடரளவும் (மு)[மொ]ருகுடை நிழற்ற
ஆர(மி)[மு]ந் தழைப்ப அறமலர் தழைப்ப[ச்*]
செம்பொன் வீர ஸிம்ஹாஸநத்து

த்ரிபுவந முழுதுடையா(ர்த்தொ)[ரொ]டும் வீற்றிருந் தருளிய கொப்பர கெசரி பன்மரான த்ரிபுவந சக்ரவர்த்திகள் ஸ்ரீ விக்கிரம சொழதெவர்க்கு யாணடு ம-ஆவது ராஜ ராஜ வள நாட்டு திருமுனைப்பாடிக் குனறத்தூர் நாட்டு திருநறுங் கொண் டையில் வைகாசித் திருநாளில் திருவுலாவம் எழுந்தருளும் அரு மொழிதெவர்க்கும் நித்திய கலியாண தெவர்க்கும் திருப்பள்ளிக்கி விதைப்புரமாக்க[3] மலையன் மல்லனான விக்கிரம சொள மலைய மான் இத் திருநறுங் கொண்டையில் குத்தகை ஏரி கீழ் உடைப்பின் பாடு திருத்திவிட்ட நிலத்தில்[4] கல்லடிச்சுப்

---

1 'நீங்கி' என வாசிக்க.

2 'திரிய' என்று வாசிக்க.

3 'விழாப்புறமாக' என்றே, இருத்தல் வேண்டுமெனத் தோன்று கிறது.

4 இந்தச் சாசனத்துக்கு ஓலையில் ஒன்றும் காகிதத்தில் ஒன்றுமாக இரண்டு பிரதிகள் உள்ளன. ஓலைப்பிரதியில் 'திருத்திவிட்ட நிலத்து' என்பதோடு சாசனம் நின்றுவிடுகிறது. காகிதப் பிரதியில் கண்டபடியே பூர்த்தியாக இது பதிப்பிக்கப்பெற்றுள்ளது.

பொட்டுவிட்டதாவது: இக்கல்லுக்குத் தெற்கு ஏரிவரை மெற்க்கும் தவுகால் வரையும் கிழக்கு நஞ்சை கொண்ட வரையும் இதின் உட்பட்ட நஞ்சை நிலமும் இன்னிலத்து உள்பட மெல்நொக்கிய மரமும் கீழ் நெ[ா*]க்கிய கிணரும் மற்றமிவைக் குட்பட்ட யெப்பெற்கொத்த வர்[க்*]கங்களும் இத்தெவர்க்கு இறையிலியாக விட்டு கல்வெட்டிக் கொடுத்தென். இது சந்திராதித்தவரைச் செல்வதாக விடுத்தென். இதுக்கு அன்றென்றுன் கெங்கையிடை குமரியிடை பாவஞ் செய்தாராவார். இது விக்ரமசொளன் எழுத்து. இது மலையமான் நம்பி எழுத்து. இவை மடபதியாகியான கைகொண்டு வெண்டும் பயிர் செய்வித்து இத் தெவர்க்கு விசெஷ ஞள் அமுதருளிவிக்கக் கடவன். இதுக்கு றண்டவென்றுன் அற மறந்தவன். அறமல்லது துணையில்லை.

சாசனம் **74**] [ *D. 2874—5*

*தானகசாலை வாசல் மேலண்டை வச்சிரப்படையில் உள்ளது.*

On the base of the west wall near the entrance to Tānaka śālai. Dated in the 10th year of the Chōḷa king Tribhuvana chakravartin **Rajaraja deva**, the inscription registers the gift of 10 *ma* of wet land by Kūḍal Āḷappiṟandān Eḷis'ai Mōhan Kāḍavarāyan for the maintenance of a perpetual lamp before the god Pārs'vanātha svāmin in the *mēlappaḷḷi* (temple at the top of the hill).

ஸ்வஸ்திஸ்ரீ[॥*] திரிபுவந சக்கிறவர்த்திகள் ஸ்ரீ ராஜ ராஜ தெவர்க்கு யாண்டு - ம வது [முதல்] திருமுனைப்பாடி குன்றத்தூர் ஞட்டு திருநறுங்கொண்டை மெலப் பள்ளியில் பாரிஸ்வநாத ஸ்வாமிக்கு திருநந்தா விளக்கு ஒன்றுக்கு விட்ட நில நிவந்தமாவது: இவ்வூர் ஏரி கீழ்புலததில நீர் நிலத்தில் தெவர் அளக்கும் தடி பதினறு சாணிஞல் உாசூய குழி கொண்ட தொருமாவாக யின்னிலம் பத்து மாவும் மற்றும் பெரும்பாடிக் காவலுந் தறியிறை தட்டார பாட்டமும் ஆயமும் இதில வரும் கடமையும் விடுத்து மற்றும் யின்னிலத்து ஆள் அமிஞ்சி பெருதாகவும் இத் தெவற்க்கு அசந்ர[ா*]திததவற செல்வதாக விட்டேன் கூடல் ஆளப்பிறந்தான் (கா)[எ]ழிசை மொகன் காடவராய னென். இதழிப்பார் மங்கைக் குமரியிடைப் பாவஞ் செய்தார் பாவங் கொள்வார்[॥*]

சாசனம்—**75**] [D. 2874—6

ஜிநாலயத்தில் தென்புறம் கிலமாகிய நித்தியகல்யாணதேவர் கோயில் மதில் வச்சிரப் படையில் எழுதியிருப்பது.

On the wall of the dilapidated shrine dedicated to Nityakalyāṇadēva situated on the southern side within the enclosure of the temple. Record dated in the 7th year of the reign of the Pāṇḍya king Tribhuvana chakravartin **Vikrama Pandya deva** registering the gift of 6 *ma* of wet land in the village for offerings to the god Appāṇḍai Nāyanār in the temple of Nāṟppatteṇṇāyirap-perumpaḷḷi at Tirunaṟuṅkoṇḍai, in Kunṟattūr-nāḍu, a sub-division of Tirumunaippāḍi, a district of Rājarāja vaḷanāḍu.

The latter portion of the record registers the grant of certain miscellaneous taxes of the Kunṟattūr-kūṟṟam for offerings and for a perpetual lamp to the god.

ஸ்வஸ்திஸ்ரீ[||*] திரிபுவந சக்ரவர்த்தி விக்கிரம பாண்டிய தேவர்க்கு யாண்டு ஏழாவது ராச ராச வளநாட்டு திருமுனைப் பாடி குன்றத்தூர் நாட்டு திருநறுங் கொண்டை நாற்பத்தெண் ணாயிரப் பெரு[ம்*]பள்ளி நாயநாராகிய அப்பாண்டை நாயநா ருக்கு நித்திய அமுது[படி*] நடக்கும்படி இவ்வூர் நஞ்சை நிலத் தில் நிவந்தமாவது அய்யன் யிருவது அடி கொலால் யிருநூறு குழி கொண்ட தொருமாவாக யிம்மா ஆறு. யிம்மா ஆறும் யின்னாயனார்க்கு அமுதறுளும்படி யி[வ்*]வாண்டு முதல் சந்தி ராதித்தவரை விடுத்தென். மற்றும் இக்கூற்றத்து நடுவில் மண் டலத்து உடையார் பெரிய உடையான் இம் ... ... ... ... யிக்குன்றத்தூர் கூற்றத்து மற்றும் தறிகடமை தட்டாரபாட் டமும் எப்பெர்ப்பட்ட வர்க்கங்களும் வருங்கடமையும் இன் னாயனார்க்கு நித்தியபடி அமுது செய்தருளும்படியும் (உ)[ஒ]ரு நந்தாவிளக்கு எரிப்பதாகவும் விடுத்தென்: இவை அழிவு செய் வார் கெங்கை குமரியிடை பாவஞ் செய்தார்க்குள்ளாவார். இவை நடுவில் மண்டலத்து பெரிய உடையான் எழுத்து. இது மலையநம்பி யெழுத்து. இயம........அறமறவற்(க்)க. அற மல்லது துணையில்லை[||*]

சாசனம்—**76**] [D. 2874—7.

அப்பாண்டை நாதராகிய பார்சுவநாத ஸ்வாமி சன்னிதியில் கிழக்கே சந்திரநாத ஸ்வாமி சன்னிதிக்கு வடக்கு உக்கிராணக் கொட்டடி வாசலுக் குக் கிழக்கில் உள்ளது.

To the east of the entrance to the store-room on the northern side of the *sannidhi* of Chandranathasvāmin shrine in the temple. A record dated in the 10th year of the Chōḷa king Tribhuvana chakravartin **Rajarajadeva** registering the grant of 3 *ma* of wet land by Kolliyūr Oḍaiyān for burning a twilight lamp in front of *yakshi* Pushpasēna dēva in the Mēl-paḷḷi in Naṟppattennāyirap-perum paḷḷi at Tirunaṟuṅkoṇḍai.

[Cf. No. 81 below].

ஸ்வஸ்திஸ்ரீ [||*] த்ரிபுவந சக்ரவர்த்தி ஸ்ரீ ராஜ ராஜ தேவர்க்கு யாண்டு ம-வது திருமுனைப்பாடி ராச ராச வளநாட்டு குன்றத்தூர் நாட்டு திருநறுங்கொண்டை நாற்பத்தெண்ணாயிரம் பெரும் பள்ளியில் மேல் பள்ளியில் இகலியராகிய[1] ஆத்திப் பட்டாலகராகிய புட்பசென தெவனுக்கு ஒரு சந்தி விளக்கு எரிப்பதாக கொல்லியூர் ஒடையான் இராஜ ராஜ தெவரை வெண்டிக்கொண்டு தருவித்த நில நிவந்தமாவது. இவ்வூர் க[ளை*]டதலை நஞ்சை நிலத்தில் இருவத்து[இ*]ரண்டடி கொலால் குழி நூற்றிருவது கொண்டதொருமாவாக இன்னிலம் மூன்று மாவும் இத்தெவர்க்கு சந்தி விளக்கு யெரிப்பதாக விடுத்தென். இவை சந்திராதித்தவல் இறையிலி நடப்பதாகவும். இவை அன்றென்றான் அறத்துக்கு மறுத்தாராவார்.[||*][2]

சாசனம்—**77**] [D. 2874–8

*ஜிநாலயத்தின் முதற்பிராகாரத்தில் சுனைக்கு மேற்கு வச்சிரப் படையில் சிலமாய்ப் போன சாசனம்.*

At the base of the wall to the west of the spring in the first prākāra of the temple. A damaged and fragmentary record dated in the 6th year of Tribhuvana chakravartin **Kopperunjinga deva,** registering the construction of the prakāra (*tirunaḍai māḷigai*) to the temple by a certain person whose name is lost.

---

1 'யக்ஷியராகிய' என வாசிக்க.

2 இந்தச் சாசனம் காகிதப் பிரதியிலே மட்டுந்தான் காணப்படுகிறது. ஓலைப் பிரதி மிகவும் சிதிலமாக இருப்பதால் இது அதிலே இருந்ததா இல்லையா வென்பது தெரியவில்லை. ஆயினும் காகிதப் பிரதியில் இல்லாமல் ஓலைப் பிரதியில் மட்டும் காணப்படும் இதே போன்ற சாசனம் ஒன்று உண்டு. அது பின்னால் 81 எண்ணாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

ஸ்வஸ்திஸ்ரீ [||*] த்ரிபுவன சக்ரவர்த்திகள் கோ பெருஞ் சிங்க தேவர்க்கு யாண்டு ௬. வது ராச ராச வளநாட்டு திருமுனைப்பாடி குன்றத்தூர் நாட்டு திருநறுங்கொண்டை தெற்கில் ஸ்ரீ கொயில் திருநடை மாளிகை செய்தான் பா......பா......ஐய்யனெ...... [கக்கிய]ராயன்...பாங்கிமான.

[இதற்கு மேல் கிலமாகி அழிந்து கிடக்கிறது.]

சாசனம் - **78**] [D. 2874—9

இப்பிராகாரத்தில் தென்னண்டை நித்திய கல்யாணி தேவர் கொயில் வச்சிரப்படையில் கிலமாய்ப்போன சாசனம்.

On the wall of the Nityakalyāṇa svamin shrine in the same prakara on the southern side. A much damaged record of the time of the Pāṇḍya king Māṟavarman *alias* Tribhuvana chakravartin **Vikrama Pandyadeva,** the date of which is lost. Seems to register some gift to the god Appāṇḍai Nāyanār in the temple of Nāṟpattennāyirap-perumpaḷḷi. The *mānāyaka* merchant-guild of Naḍuvil-maṇḍalam is also found mentioned in the inscription.

ஸ்வஸ்திஸ்ரீ [||*] கொ மாறபன்மர்த் திரிபுவன சக்கிறவற்தி விக்கிறம பாண்டிய தேவற்க்கு யாண்டு..........நடுவில் மண்டலத்து மானுயகரான வாணி நதகாதனொம[1] எம்மண்ட.......... யான் னாற்பத் தெண்ணுயிரம் பெரும் பள்ளியில் நாயனார் அப்பாண்டை நாயனார்..........மருவாவாகெகராய அஞ்சாவரையும் முதலான......பெரிகசிமுயிக..........

இமடநெசி யெப்பேர்பட்டது வற்கங்களும் ஆளுவது முதல் இன்னுயனாராகிய அப்பாண்டை நாயனாருக்கு......இவர்கள் முன் [பிலாண்டு யிறுக்கும்]படியெ இறுப்பார்[கள]ாக விட்டொம். நடுவில் மண்டலத்து மானுயகரான வாணிகத்தாத்......தோம்[1]...

[இதன் முடிவும் இல்லை; கிலமாய்ப் போய்விட்டது.][2]

---

1. 'வணிக நகரத்தோம்' என்று இருத்தல் வேண்டும்.
2. இரண்டு தனிப் பகுதிகளாகவே ஓலையில் எழுதப்பட்டிருப்பினும் காகிதப் பிரதியில் ஒரே சாசனமாகக் காணப்படுகிறது.

சாசனம் - **79**] [D. *2874—10*

*தானகசாலை மண்டபத்து வாசல் வச்சிரப்படையில் சிலமான சாசனம்*

On the wall of the Tānakas'ālai maṇḍapa. The record is too fragmentary.

ஸ்வஸ்திஸ்ரீ [||*] த்ரிபுவந சக்கரவர்த்திகள்.....................
தான் ஆட்கொண்டாலும் மங்கல.........கூத்தாம வர தெவர்க்கு
அடமானதும[ாக].........இஷிர மலைதானேவிடம் பண்பி.......
ன. ப......ஸ்ரீ||.

[இப்படிக் சிலமான சாசனங்கள் இன்னும் அநேகம் இருக்கின்றன.]

சாசனம் - **80**] [D. *2767*

*நித்திய கல்யாண தேவர் ஆலயம் தென்புற மதிலில் உள்ளது.* [1]

On the south,wall of the Nityakalyāṇadēva shrine in the temple. A damaged record of the [8]th year of the Chōḷa king Tribhuvana chakravartin **Kulottungachola deva.** Seems to register the gift of 40 cows for burning a perpetual lamp, probably in front of the god Kachchi Nāyaka dēva in the southern shrine of the temple, Nāṟpatteṇṇāyirap-perumpaḷḷi at Tirunaṟuṅkoṇḍai.

The verse at the end of the inscription No. 71 above refers to a certain *maṭhapati*, i. e., the head of a maṭha. There is at present no maṭha in the village. The religious head of the Jainas in South India now lives at S'ittāmūr (vide. p. 39 above) and the *pīṭha* is called the Jina Kāñchī pīṭha. The mention of the god Kachchi Nāyaka dēva in the temple at Tirunaṟuṅkoṇḍai suggests that the maṭha, now at S'ittāmūr, was at that time located at Tirunaṟuṅkoṇḍai.

ஸ்வஸ்திஸ்ரீ [||*] த்ரிபுவநசக்ரவத்திகள் ஸ்ரீ குலோத்துங்க
சோழதேவற்கு யாண்டு [அ-வது] ராஜ ராஜ வளநாட்டு திரு
முனைப்பாடித் திருநறுங் கொண்டை நாற்பத்தெண்ணாயிரப்
பெரும்பள்ளித் தெற்கிற் கொயிற் கச்சிநாயக தேவர்க்கும் மவ......
.........ஞபடுர்...............நாட்டு உலகுடைடெ.........ககளகரா

---

1 *இந்தச் சாசனம் ஓலைப் பிரதியில் மட்டுமே கிடைக்கிறது,*

வராயபகெஞரைய மன - ஒரு திரு நந்தா விளக்கு எரிப்ப[தாக மங்கலமு]டையான் நயச்சநாதெவர்க் கை கொண்டப் பசு பத்தும் ஆற்றுமூர் நாட்டு உலகுடையெ[ா]ர் கைகொண்ட பசு பத்தும் ஆன்று மூ ா பை டா ச க ர சுவைஞட........கை கொண்ட பசு ஐஞ்சும் திபங்குடை விஓமைநாதன் உடையான் கைகொண்ட பசு ஐஞ்சும் ஆக பசு ஞற்பது முதிரு..................தெவற்க்கு செல்வதாக விட்டென். இவை மறுப்பான் (ப்) பெண் பாதகத்துக்க(ா)டைவாராவாரெ[||*]

சாசனம் - 81] [D. 2767

ஜிநாலயத்தின் கச,ஞவில் உள்ளது.

(No. 383 of 1902.) On the wall of the treasury in the temple. Record dated in the [13]th year of the Chōḻa king Tribhuvana chakravartin **Rajarajadeva** registering the gift of 6 *Kāśu* by Ādi Bhaṭṭalakan Pushpasēna with the concurrence of Kolliyūr Uḍaiyan for burning a twilight lamp in front of the *yakshi* in the *Mēlirpaḷḷi* (the temple on the hill) at Tirunaṟuṅkoṇḍai.[1]

[Cf- No. 76 above]

The Epigraphy department has read the name of the king as Rajadhirāja deva. (**South Indian Inscriptions**, Vol. VII, No. 1013)

ஸ்வஸ்திஸ்ரீ [||*] த்ரிபுவந சக்ரவத்தி-கள் ஸ்ரீராஜ ராஜ தெவற்கு யாண்டு ம்[ங] வதுமுதல் திருநறுங்கொண்டை மெலிற் பள்ளி யிகலியாற்கு[2] ஆதி பட்டாலகன் புப்பசெனதெவன் ஒரு சந்திவிளக்கு எரிப்பாநாக கொல்லியூர் உ[டை]டயான் ஒப்பி சொல்லி குடுத்த காசு [சு]. இது அசூாதித்தவற் [||*][3]

---

1 இது தென்னிந்திய சாசனங்கள், VII வால்யூம், 1013 நெ. ஆக வெளியிடப்பட்டுள்ளது. அவ்விடத்திலே அரசன் பெயர் ராஜாதிராஜன் என்று காணப்படுகிறது.

2 'யக்ஷியாற்கு' என வாசிக்க.

3 இந்தச் சாசனமும் ஓலைப் பிரதியில் காணப்படுவது. மேலேயுள்ள 76 நெ. சாசனத்துடன் இதை ஒப்பிட்டுப் பார்க்கவும்.

[பின் வருபவை ஓலைப் பிரதியிலே மட்டும் காணப் படுகின்றன.]

சாசனம் - **82**] [D. 2767

(அ)

முக மண்டபம் தென்புறம்

On the southern side of the *mukhamaṇḍapa.*

The following names are found engraved :

S'ri Guṇabhadra charya

S'rī Vīrasaṁkha pratishṭāchārya.

ஸ்ரீ குணபத்ராசாரியரு

ஸ்ரீ வீரஸம்வப்ரதிஷ்டாசாரியரு

(ஆ)

வடபுறம்

On the northern side.

A Tamiḻ verse, probably a quotation, damaged and hence incomplete.

இயங்குஞ் செயலு மிரு(ங்)[க்]குஞ் செயலு மிருவினைக்குள்
முயங்குஞ் செயலுந் தவத்தெ..................மெசந்தலெ
தயங்குஞ் செயலுஞ் சிவன் செயலெ யென்று சந்ததஞ்சா
வயங்குஞ் சதபத்திரத்லெ......................

(இ)

Anantappan, son of S'rī Aṟam-vaḷarttān, worships always.

ஸ்ரீஅறம் வள[ர்*]த்தான் மகன் அனந்தப்பன் சதா செர்வை

(ஈ)

Stating that the step was 'the gift of Baṇḍi-dēva, son Guṇavīra paṇḍita, a goldsmith of Tiṟunaṟuṅkoṇḍai.

ஸ்வஸ்திஸ்ரீ ·[||*] இந்தப் படி வெட்டுவித்தான் திருநறுங் கொண்டைத் தட்டான் குணவீர தெவங் பண்டிதெவன் தருமம்

[D. 2874

[காகிதப் பிரதியில் காணப்படுபவை]

(உ)

திருநறுங்கொண்டை பாரிசுவநாத ஸ்வாமி சந்திரநாயஸ்வாமி ஜிநாலயத்தில் முகமண்டபத்தில் பட்டிகை வச்சிரப் படையில் எழுதியிருக்கும் பெயர்கள்.

ஸ்வஸ்தி [||*] ஸ்ரீமங் ஸ்ரீ குணபத்ராசார்யரு
ஸ்ரீ வீரஸங்கப்ரதிஷ்டாஆர்யரு

(ஊ)

இத் திருநறுங்கொண்டை ஜிநாலயத்தில் தெற்கு மேற்கில் முனீசுரர்கள் பீடங்களில் எழுதியிருக்கிற பெயர்கள்.

The following names, and so many others, found engraved on the pedestals of the images of saints.

S'rīman Traividya chakravartin.
Samayanātha munīs'vara.
S'rīman Guṇabhadrachārya.

ஸ்வஸ்தி [||*] ஸ்ரீமநு த்ரைவித்ய சக்ரவர்த்திகள்
ஸமயநாய முநீஸ்வர
ஸ்வஸ்தி. ஸ்ரீமநு குணபத்ராசார்யர்

[இப்படி இன்னம் அநேக பீடங்கள் பூமியிலுள்ளேயும் பூமியின் மேலேயு மிருக்கின்றன. இவ்வளவு யென்று தொகையில்லை.]

## திருவெண்ணெய்நல்லூர் Tiruveṇṇainallūr

பெண்ணை ஆற்றின் கரையில் அமைந்து திருவெண்ணெய்நல்லூர் எனப் பெயர் பெற்ற இவ்வூர் மக்கென்ஸியின் காலத்திலே ஒரு துக்கடியின் தலைமை ஸ்தானமாக விளங்கியிருக்கிறது. சைவ சமய குரவர்களிலே ஒருவரான சுந்தர மூர்த்தி நாயனாரின் வாழ்க்கையையே மாற்றி அமைத்த பெருமை இவ்வூரில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவபெருமானுக்கு உரித்து. அதனால் அவர் தடுத்தாட்கொண்ட நாயனார் என்றும் விரைந்து வெல்லும் பெருமாள் என்றும் வழங்கப் பெறுவர். பக்கத்தில் உள்ள ஓர் ஊருக்கு அரியவான வழக்கு வென்ற பெருமாள் நல்லூர் என்று பெயர் வழங்கப் பெறுவதும் இந்தச் சம்பவத்தை ஒட்டியே போலும். இப்போது அக் கோயில் கிருபாபுரீச்வரர் ஆலயம் என்று குறிக்கப்பெறுகிறது.

இவ்வூர் விஷ்ணு ஆலயத்திலே எழுந்தருளியிருக்கும் எம்பெருமானுக்கு வைகுந்தப் பெருமாள் என்று பெயர்.

சாசனம்—**83**] [D. 3636

ஸ்ரீ வைகுந்தப் பெருமாள் கோவில் மண்டபத்தில் முன் பக்கம் தென் புறம் துவாரபாலகர்கள் யிருக்கும் இடத்திற்கு மேற்கு மதிலுக்குத் தென்புறம் மதிலில் எழுதியிருப்பது.

(509 of 1921) On the wall to the south of entrance in the maṇḍapa in front of the central shrine in the Vaikuṇṭha perumāḷ temple. A record dated in the 5th year, Chittirai of the Pāṇḍyan king **Vikrama Pandyadeva** beginning with the Sanskrit *praśasti*, "samastabhuvanaika vīra" etc., registering the tax-free gift by the king of some lands in Peruṅkuḷattuḍaiyān-ēndal in S'ēndamaṅgalap-paṟṟu for conducting a service called Vikrama-pāṇḍyan sandi and for a festival called Vikrama-pāṇḍyan-tirunāḷ, named after the king, to the Vaikuṇṭha perumāḷ. It also mentions the road Kaḍavarāḍittan peruvaḷi among the boundaries and Ponpaṟṟi-Uḍaiyān among the signatories.

ஹரிঃ ஸ்வஸ்தி [ஸ்ரீ*] ஸமஸ்த ஹுவநைகவீர அநு௧மு ஶம்மள ஷுதீவ ஶயஙா வஙி ஶஹைநு கௌரள கமு காமடாம்ஙகாக ஷிவாகர ஜாஙவம்ஶ வாரிராஶி பர்வபாநு ஞுங்காவதி கமல கூஹி கஶந காஸ்கண்ஷ கண்ஷாஹகரிகருப கண்ஷஶி[1] க்ஷேசாஸர [விசார*]ண நரஸிஹ க(ந)[ா௦]கவம்ஶ வெஶ்வாநர ஜயஞ ஶம்மள வஙராயீஶ்வர வீரகண்ஷகொவாமு ஹஜம்ம (ஸி)[வி]ஹம்மராஜ காஞிவஙர விரஷித ஸா[ழ*] ஸாஜ்யாஹிஷேக மணவதி மஙமஜ கூட வாகமு பஹவிய வெராஶிசவிஹஜசந[2] வுணத ரா[ஜ*]ஸ்தாவநாசாய சிநுஹவந ராஜாதியி ராஜ வரஶெஶ்வர ஸ்ரீவிக்ரமவாண்ஷ்யதெவ[3] னடுவில் மண்டலத்து திருமுனைப்பாடி நாட்டு திருவெண்ணைநல்லூர் ஸ்ரீ வைகுந்த பெருமாள் கொவில்

---

1 'ஞுங்காவதி காஸகூட கஶந காஸகணு கணசாட கரி கஸஹ கணீரவ' என்று வாசிக்க.

2 'பஹவிய வெரி சநுசஹஂஜந' என்று வாசிக்க'

3 இந்தப் பிரசஸ்தியின் தமிழ்மொழி பெயர்ப்பு வருமாறு:

"எல்லா உலகுக்கும் ஒப்பற்ற தனிவீரனும், சந்திரகுலத்தின் மங்கலத்தை ஒளிபெறச்செய்யும் சோதியும், மதுராபுரியின் மகேந்திரனும்,

ஸ்த்தாநத்தாருக்கும் திரு[ப்*]பதி ஸ்ரீ வைஷ்(ட்)ணவாளுக்கும்: இன்னுயனுருககு(ம்) நம் பெரால் கட்டின விக்கிரம வாணுன சுவாமிக்கும்[1] விக்கிரம பாண்டியன் திருணுளுக்கும் திருவிடையாட்ட இரையிலியாக குடுத்த செந்தமங்கல பத்தில் காடவரா[தி*]த்தன் பெருவழிக்கு மெர்க்குப்பட்டப் பத்தில் வூரடங்க பாமான சொழியதரயன் ஏந்தலான பெருங் குளத்துடையான் எந்தல் ஊரடங்க [எ](ர)த்த சுருக்கமுட்ப்பட்ட செவலே எரிககு மெர்க்கு தென்புர மதளுக்கு வடக்கு எலந்துரை எல்லேக்கு கிழக்கு வளநல்லூர் எல்லேக்கு தெற்கு இன்னுங்கெல்லேக்குள்ப்பட உண் நிலம ஒழியன்றி எத்தச் சுருக்கம் உட்பட விள நிலமும் புன்செயும் புரவடையும் அனேக்காய[2], வர்க்கங்களும் தரி எரை தட்டார பாட்டங் குளவடை உள்ளிட்ட காசாய வர்க்கங்களும் உள்பட கார் பசானம் இவ்வூற் வூரடங்கலும் எத்தச் சுருக்கமுட்பட -ரு-வது சித்திரை மாதம் முதல் செந்த......கயிறையிலே திருவெடையாட்டமாக தந்தொம். இப்படிக்கு இவ்வொலி பிழைபாடாக[3] கொண்டு கல்லிலும் செம்பிலும் வெட்டி கொள்க. இவை பாண்டி மண்டலத்து குருங்குடி ஞட்டு

---

கேரள குலமான காலாந்தகாரத்துச் சூரியனும், சோழவமிசமான சமுத்திரத்துக்கு வடவாக்னியானவனும், காலகூடம் என்னும் விஷம் போன்ற லங்காபதிக்குக் காலகண்டன் போன்றவனும், கர்ணுடக யானேக்கன்றிற்குச் சிங்கம் போன்றவனும், க்ஷேமன் என்னும் மூங்கிலுக்கு வைச்வாநரம் (அதாவது நெருப்பு) ஆனவனும், ஜயந்த மங்கலபுரத்தின் அதிபனும், வீரனுன கண்ட கோபாலனுகிய பாம்புக்குக் கருடனும், காஞ்சிபுரம் வரையில் பரந்த சாம்ராஜ்யத்துக்கு அபிஷேகம் செய்யப் பெற்றவனும், [காகதிய] கணபதியாகிய மத யானேக்குச் சுர நோய் போன்றவனும், பலவகையான எதிரிகளின் கோட்டைகளே இடித்தவனும், தன்னே வணங்கிய மன்னர்களே நிலேநிறுத்தியவனும், மூவுலகினும் உள்ள அரசர்களுக்கெல்லாம் பேரரசனும், பரமேச்வரனுமான ஸ்ரீ விக்ரம பாண்டிய தேவர்''

இதிலே குறிக்கப்பெற்றுள்ள க்ஷேமன் பெயர் சேமன் என்று ஜடாவர்மன் சுந்தர பாண்டியனுடைய மெய்க்கீர்த்தியிலே காணப்படுகிறது. இவன் யார் என்பது இன்னும் சரியாக நிச்சயமாகவில்லே. இவனுடைய கல்வெட்டு ஒன்று இராமநாதபுரம் ஜில்லாவில் திருப்புத்தூர்க் கோவிலில் காணப்படுகிறது.

1 'விக்கிரம பாண்டியன் சந்திக்கும்' என்று வாசிக்க.

2 'அனேத்தாய' என்று வாசிக்க.

3 'இவ்வோலே பிடிபாடாக' என்று வாசிக்க.

